# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக ‘உண்ண’ வேண்டுமே!

## உங்களுக்குத் தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்®

# விட்டாமில்க்®

உங்களுக்குள் இன்னொரு புதிய உயிர், உங்கள குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் உங்கள் ஆரோக்கியத்திற்கும், சிசுவின் வளர்ச்சிக்கும் போதுமான கூடுதல் ஊட்டச்சத்துக்கள் தேவை.

காம்ப்ளான்—விட்டாமில்க் உங்களுக்கும், பிறக்கப்போகும் உங்கள் குழந்தைக்கும், தேவையான ஊட்டச்சத்துக்களையும் மற்றும் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களையும் கொண்டது. இதில் ஃபோலிக் ஆஸிடு, பால் புரதம் (22.2 கிராம்), வைட்டமின்கள் A, $B_6$ மற்றும் C, இரும்புச் சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம், தேவையான அளவில் அடங்கியுள்ளது.




தினமும் 2 கப்புகள்

ரெகுலர் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/91/R-TAM

# ஒசூரை உலுக்கிய கொலைகள்!

**வரிசையாகப் பத்தொன்பது கொலைகள்! ஒவ்வொன்றிலும், கொலை செய்யப்பட்டவரின் உடல் சேதப்படுத்தப் பட்டிருக்கும்! ஒசூர் வட்டாரத்தில் 1985 முதல் '90 வரை நடந்த இந்தக் கொலைகளின் மர்ம முடிச்சு அவிழ்க்கப்பட்டுள்ளதா? கடந்த நவம்பரில் தர்மபுரி எஸ். பி. யாகப் பொறுப் பேற்ற எம். ஜி. ஜார்ஜைச் சந்தித்துக் கேட்டோம்:**

கேள்வி: தாங்கள் பொறுப்பேற்றவுடன் ஒசூர் கொலைகளைக் கண்டுபிடிக்க மேற்கொண்ட புதிய நடவடிக்கைகள் என்ன?

தர்மபுரி எஸ். பி. எம். ஜி. ஜார்ஜ்: உடனடியாக இதற்காக ஒரு விசேஷ காவல் பிரிவை அமைத்தேன். இதில் இரண்டு இன்ஸ்பெக்டர், சப்–இன்ஸ்பெக்டர் உட்படப் பத்து பேர் செயல்படுகிறார்கள். இந்த விசேஷக் குழுவின் சுறுசுறுப்பான பணியில் தற்போது வேகமாகத் துப்பு



தர்மபுரி எஸ். பி. ஜார்ஜ்

துலக்கப்பட்டு வருகிறது.

கே: கடந்த ஐந்து வருடங்களாக நடந்த கொலைகளைக் கண்டுபிடிப்பதில் ஏன் தாமதம்?

எஸ். பி.: தாமதம் என்று சொல்வதற்கில்லை. காவல் துறை தனது கடமையைச் செய்துதான் வந்திருக்கிறது. ஒசூர் கர்நாடக ஆந்திர எல்லைகளுக்கருகேயிருப்பதால் சில பிரச்னைகள். வேறு இடங்களில் (அண்டை மாநிலம்) கொலை செய்யப்பட்டு, பிரேதங்கள் மட்டும் இங்கு கொண்டு வந்து போடப்படுவதும் உண்டு! மேலும், தர்மபுரி மாவட்டம் மலைப்பாங்கான பகுதி. காடுகளும் உண்டு. இது கொலை சம்பவங்கள் நிகழவும், குற்றவாளிகள் தப்பித்துக் கொள்ளவும் ஏதுவாக இருக்கிறது. கொலை செய்யப்படுவோர் வேறு இடங்களைச் சேர்ந்தவர்களாயிருப்பதால் அவர்கள் பற்றி முழு விவரங்கள் தெரிவதில்லை. அவ்வப்போது அறிவிப்புக்கள் செய்தும் பல தரப்பில் விசாரித்தும் கூட உண்மை தெரிவதில்லை. காணாமல் போனவர்கள் பற்றிய புகார்களைப் பரிசீலித்த போதும் கூட தகவல்கள் கிடைப்பதில்லை. போலீசார் தொடர்ந்து செயல்பட்டுத்தான் வந்திருக்கிறார்கள்.

கே: புதிதாக அமைக்கப்பட்ட விசேஷக் குழுவின் பணி என்ன?

எஸ். பி.: ஒசூரைச் சுற்றிலும் பல இடங்களை இவர்கள் கண்காணித்து வருகிறார்கள். உண்மையிலேயே பிரேதங்கள் அண்டை மாநிலங்களிலிருந்து கொண்டு வரப்படுகின்றனவா என்பதை அறிய அனைத்து வாகனங்களும் சோதனையிடப்படுகின்றன. இதற்காகச் சுமார் ஒன்பது இடங்களில் சோதனைச் சாவடிகள் அமைக்கப்பட்டுள்ளன. தவிர, அவ்வப்போது திடீர் சோதனை நடத்திச் சந்தேகத்துக்குரிய நபர்களையும் – பழைய குற்றவாளிகளையும் விசாரணை செய்து வருகிறது ஸ்பெஷல் டீம்.

கே: இதனால் குற்றங்கள் குறைந்துள்ளதா?

எஸ். பி.: நிச்சயமாக! தற்போது ஊரில் சட்டம், ஒழுங்கு நிலை கூட திருப்திகரமாக உள்ளது. சமீப காலமாகக் கொலைகள் ஏது



• பிடிபட்டவர்களுடன் சிறப்புக் குழு.

மில்லை! அத்துடன், '89, '90 இல் நடந்த இரண்டு கொலைகளைச் செய்ததாகச் சந்தேகிக்கப்படுவோர் பிடிபட்டு நக் கிறார்கள். இவர்கள் இதே மாவட்டத் தைச் சேர்ந்தவர்கள்தான்.

கே: அண்டை மாநிலங்களில் கொலை கள் செய்யப்பட்டுப் பிரேதங்கள் இங்கே தர்மபுரி பகுதியில் கிடத்தப்பட்டன என்று சொன்னீர்கள். ஆனால் இரண்டு வழக்கு களில் பிடிபட்ட ஆட்கள் உள்ளூர்க்காரர் கள். மற்ற கொலைகளும் இங்கேயே செய்யப்பட்டிருக்கலாம் அல்லவா?

எஸ். பி.: அப்படிச் சொல்வதற்கில்லை. தொடர்ச்சியாக நடந்தாலும், கொலைகள் வெவ்வேறு காரணங்களுக்காக வெவ்வேறு நபர்களால் செய்யப்பட்டதாகவே தோன்று கிறது. நான் முன்பே சொன்னது போல் இது அண்டை மாநில எல்லைப் பகுதி; மலை, காடுகள் நிறைய உள்ள பகுதி; குற்ற வாளிகளுக்குச் சௌகரியமாய் இருக்கிறது! நாங்கள் சந்தேகிக்கும் நபர்களைக் கைது செய்துள்ள இரு வழக்குகளிலும் கொலை செய்யப்பட்டவர்கள் ஒசூரைச் சார்ந்தவர் கள்தான்! ஒரு வழக்கில் கணவனே மனைவியைக் கொலை செய்து விட்டு 'அவளைக் காணவில்லை' என்று போலீசில் தெரிவித்திருந்தான். அப் பெண்ணின் பெற்றோரும் புகார் கொடுத்திருந்தனர். ஹரப்பலிகுட்டை என்ற இடத்தில் உள்ள மலைக் கோயில் ஒன்றில் கொலை நடந் திருந்தது! பிரேதத்தின் நகைகள் காணா மல் போயிருந்தன! புகார் கொடுத்த பெற்றோர்களை மட்டும் அழைத்து வந்து அடையாளம் காட்டிய போது கொலை செய்யப்பட்டிருந்தது அவர்கள் தெரிவித்த பெண்தான் எனத் தெரியவந்தது. இந் நிலை யில் அந்தப் பெண்ணின் கணவனான நாகராஜ ரெட்டியைத் தேடிய போது காண வில்லை! விசாரணை தொடங்கிய போது, ரெட்டி முதல் மனைவி இருக்கும் போதே இரண்டாவது திருமணம் செய்து கொண்டது தெரியவந்தது. மனைவியின் நடத்தையைச் சந்தேகித்தவன் அவளைக் கொலை செய்து விட்டான். ஆனால் தகுந்த சாட்சியங்கள் இல்லாதது இடைஞ்சலாக இருந்தது. இந் நிலையில் அடகுக் கடை ரசீது ஒன்று அவன் வீட்டில் கைப்பற்றப் பட்டது. சம்பந்தப்பட்ட கடையில் விசாரித்த போது கொலை செய்யப்பட்ட பெண் அணிந்திருந்த நகைகள் அடமானம் வைக்கப்பட்டிருந்தன எனத் தெரியவந்தது. அடுத்த சில நாட்களில் நாகராஜ ரெட்டியை விசேஷக் குழு சுற்றி வளைத்தது!

இரண்டாவது கொலை வழக்கில் இறந்து கிடந்த பெண் ஒரு விலைமாது என்று தெரியவந்தது. சாமக்கா என்ற இந்தப் பெண் உத்தனப் பள்ளியைச் சேர்ந்தவள். ஐந்து பேராக ஒன்று சேர்ந்து மூர்க்கத்தன மாக இவளைப் பயன்படுத்திக் கொண்ட தோடு கழுத்தை நெரித்துக் கொன்றும் விட்டனர்! அத்துடன் அவள் அணிந்திருந்த விலை உயர்ந்த புடைவையையும் எடுத்துச் சென்று விட்டிருந்தனர்!

இக் கொலை விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டதும் உடனடியாக உத்தனப் பள்ளி பகுதிகளில் திடீர் ரெய்டுகள் நடத்தி, பல விலைமாதர்களையும் விசாரித்த போது இந்த சாமக்காவைப் பற்றியும் அவளுடன் தொடர்பு கொண்டவர்களைப் பற்றியும் தகவல் சேகரிக்கப்பட்டது. வெங்கடசாமி, வெங்கடேஷ், தியாகராஜன், வெங்கடா சலம், நவாப் என்ற ஐந்து பேரும் பிடிபட்ட னர். சாமக்காவின் மேலாடை இவர்களிட மிருந்து கைப்பற்றப்பட்டது.

கே: தொடர்ந்து எல்லா வழக்குகளையும் கண்டுபிடித்து விட முடியும் என்று நம்பிக்கை இருக்கிறதா?

எஸ். பி.: போலீசார் கடினமாக உழைக் கிறார்கள். பொதுவாக இவர்களுக்குத் தரப்படும் வசதிகள் குறைவாக இருந்தாலும் கூட உறுதியுடன் செயலாற்றுவதால் குற்ற வாளிகள் விரைவில் பிடிபடுவார்கள் என்று தாராளமாய் நம்பலாம். அதே போல் இனியும் இது போல் கொலைகள் நடக்காமல் இருக்கவும் தகுந்த நடவடிக்கைகள் மேற் கொள்ளப்படும்.

— டி. வி. கே.

படம்: சுபா.

கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி!

# இசையுயர்ந்தாலும் பாடல் உயரவில்லை!

**ரூ. 50 முதல் பரிசு பெறும் கட்டுரை:**

திரைப் பாடல்களின் வெற்றி என்பது ஒருவரின் தனி வெற்றியாகி விடாது. நல்ல இசையும், கருத்தாழமிக்க பாடல் வரிகளும், பாடுபவரின் குரல் வளமும், சிறந்த ஒலிப்பதிவும் ஒன்றாய் இணையும்போதே நமக்கு நல்ல தரமான பாடல்கள் கிடைக்கின்றன. இருந்தபோதிலும் தற்கால திரைப் பாடல்களில் இசையே முக்கியமான இடத்தைப் பிடித்துள்ளது. நல்ல இசையினாலேயே பாடல் மக்கள் மனத்தில் பதிகிறது.

ஓர் இசையமைப்பாளர் தம் முழுத் திறனையும் வெளிப்படுத்தி, காட்சிக்குத் தகுந்தபடி 'டியூன்' போடுகிறார். டியூனிற்குத் தகுந்தபடி, குறிப்பிட்ட வரம்பிற்குள்ளேதான் பாடலாசிரியர் பாடல் எழுத வேண்டியிருக்கிறது. எனவே திரைப்பாடல் மக்கள் மத்தியில் பிரபலமாகும்போது முழுமையாகத் தெரிவது இசையே. பாடல் வரிகளை மக்கள் புறக்கணித்து விடுகிறார்கள்.

இதற்கு உதாரணமாக "கேளடி கண்மணி" படத்தில் இளையராஜாவினால் இசையமைக்கப்பட்ட 'மண்ணில் இந்த காதலன்றி' எனத் தொடங்கும் பாடலைக் குறிப்பிடலாம். இதற்கு முன் எத்தனையோ படங்களில் இதை விட மேலாகக் காதலைப் புகழ்ந்து, பாராட்டிப் பாடல்கள் வந்திருக்கின்றன. ஆனால் அந்தப் பாடல்கள் அடையாத பெரும் வெற்றியை இந்தப் பாடல் மட்டும் பெறக் காரணம் என்ன? இந்தப் பாடலில் இளையராஜா எஸ். பி.பி.யை இரண்டு சரணம் முழுக்க மூச்சு விடாமல் பாடச் செய்திருப்பதுதான். கருத்துக்காகப் பாடல்கள் கேட்கும் காலம் போய், இசைக்காக பாடல்கள் என்ற நிலைமை உருவாகி விட்டது.

என்னதான் திரைப்பாடல்களில் இசையின் தரம் உயர்ந்திருந்தாலும் பாடல்களின் தரம் இன்னும் உயரவில்லை. பாவேந்தர் பாரதிதாசன், கவிஞர் கண்ணதாசன் போன்றவர்கள் இருந்தவரை அவ்வப்போது நல்ல கருத்துக்களைக் கொண்ட பாடல்கள் இசை வடிவமாக்கப்பட்டன. ஆனால் அவர்கள் மறைவுக்குப் பிறகு வந்த படங்களில் கொச்சையான வார்த்தைகளும், புரியாத சொற்களும் நிரம்பிய பாடல்களே மிகுதியாக வருகின்றன. டியூனிற்குத் தகுந்தபடி பாடல் வரிகள் எழுதப்படுவதே காரணம்.

தமிழ்ப் பாடல்களில் ஆங்கில வார்த்தை போட்டால் பெருமை என்று நினைக்கிறார்











கள் இன்றைய பாடலாசிரியர்கள்.

"மாருகோ மாருகோ, மாருகயி
ஜோருகோ ஜோருகோ ஜோருகயி."

"ஏ ஸ்விட்டி, 'ஏ ப்யூட்டி சின்னப்
பெண்ணே"

"ஜிங்கிடி, ஜிங்கிடி, உனக்கு"

நமது திரைப் பாடல்களின் அவல நிலையை எடுத்துக்காட்ட இது போன்ற பல உதாரணங்களைக் கூறலாம்.

"வா வா வல்வுல ராணி — குல்
குல்வா குல்வல மேனி
என்ற பாடலின் கருத்து என்ன என்று புரிகிறதா? இல்லை, வார்த்தைகள்தான் என்ன என்று தெரிகிறதா?

இவற்றையெல்லாம் பார்க்கும் போது இன்றைய திரைப் பாடல்களில் நாம் ரசிக்கக்கூடிய அம்சம் இசையே என்பது புரிகிறது.

'பாடலுக்கும் போதிய முக்கியத்துவம் தந்தால் இரண்டையும் சேர்த்து ரசிக்கலாமே; முழுமையான மனநிறைவு கிடைக்குமே' என்ற ஏக்கமும் எழுகிறது.

— ஈ. முத்துக்குமார்,
இரண்டாம் ஆண்டு, ஆங்கில இலக்கியம்,
ந. க. ம. கல்லூரி,
பொள்ளாச்சி — 642 001.

## இசை ஜாலத்துடன் இணையும் சொற்றொடர்கள்!

இப்போது வெளியாகும் பாடல்களில் இசை அமைப்பாளரின் அபாரத் திறமை வெளிப்பட்டாலும் ஓராண்டிற்குள் பாடல் செத்து விடுகிறது. இதற்குக் காரணம் பாடல் என்பது கவிதையாக இல்லாமல் சொற்தோரணங்களாய்ப் போய் விட்டதுதான். உதாரணமாக இதயக் கோவில் திரைப் படத்தில் இளையராஜா இயற்றிய பாடலைப் பார்க்கலாம்.

"...நீயும் நானும் போவது, காதல் என்ற
பாதையில்
சேரும் நேரம் வந்தது, மீதி தூரம் பாதியே
பாதை ஒன்று ஆனபோதும் திசைகள்
வேறம்மா
உனது பாதை வேறு எனது பாதை
வேறம்மா..."

இதில் இறுதி இரு வரிகளில் உள்ள கோரமான முரண்பாட்டைக் கவனியுங்கள். இதற்கு மறுபுறமாக வைரமுத்து போன்றவர்கள் சமீபத்தில் எழுதி வரும் சில நல்ல பாடல்கள் கூட தகுந்த இசை இன்றி ரசிகனைப் போய்ச் சேராமலே இருந்து விடுகின்றன.

பயணங்கள் முடிவதில்லை, நிழல்கள் போன்ற படப் பாடல்களைப் பத்தாண்டுகளுக்குப் பின்பும் ரசிக்க முடிகின்றதென்றால் இசையும் கவிதையும் இணைந்து முகிழ்த்ததுதான் காரணம். மேற்கண்ட

உண்மைகளை ஆராய்ந்து பார்க்கும் போது கீழ்க்கண்ட முடிவு தோன்றுகிறது.

''இசைக் கலைஞனும், பாடற் கலைஞனும் தங்கள் சொந்த விருப்பு வெறுப்புகளை மறந்து ஒன்றிணைந்து கலைக்காகத் தங்களை அர்ப்பணித்தால்தான் அவர்கள் படைப்பு அமரத்துவம் பெற முடியும். அவ்வாறில்லாமல் தனித்து இயங்கினால் சொற்றொடர்களை மட்டும் வைத்துப் புரியப்படும் இசைஜாலம் விரைவில் மரிக்கிறது.''

— மு. செந்தில்,
மூன்றாம் ஆண்டு,
கம்ப்யூட்டர் ஸைன்ஸ்,
மெப்கோ பொறியியற் கல்லூரி,
அர்ணாத்தூர் போஸ்ட்,
சிவகாசி — 626 005.

## வேகச் சுழற்சியில் அழியும் திறமை!

திரைப்படப் பாடல்களில் அதிகம் கவர்வது இசையே. இந்தித் திரைப் படப் பாடல்கள் நம்மிடையே பிரபலமாகியுள்ளனவே. பாடலின் பொருள் புரிந்தா அவற்றை ரசிக்கிறோம்? எனவே இசைக்கு முதலிடம் அமைவது இயற்கையன்றோ.

மெட்டுக்குப் பாடலெழுதும் நிலைக்குத் தள்ளப்படும் கவிஞர்கள். நல்லாவுக்கேற்றபடி தலையைச் சரி செய்கிறார்கள். அதன் பயன் 'ஹலவ்வா ஹலவ்வுலே மேஷி' போன்ற பொருளில்லாத' வார்த்தைகள்; அல்லது இலக்கியத் தரம் சிறிதும் இல்லாத சாதாரண பாடல்கள். பொருள் நிறைந்த அர்த்தமுள்ள பாடல்கள் அத்திப்பூவாகின்றன. அர்த்தமுள்ள வரிகளும் இனிமை நிறைந்த இசையும் சேர்ந்தால் பாலோடு தேன் கலந்தது போலாகும். பழைய பாடல்களைப் பாருங்கள். சுரதா, பட்டுக்கோட்டையார் உடுமலையார், கவியரசு போன்றோர் எழுதிய அழகிய வார்த்தைப் பாவைக்கு இசையமைப்பாளர் இனிமையான இசைப் பட்டுடுத்திப் பேரழகு செய்தனர். அவள் உருவம் ரசிகர்கள் நெஞ்சில் அழியாத சித்திரமாக நிலைபெற்றது.

இன்றும் இசைஞானி, தேவேந்திரன், ராஜ்குமார் போன்ற திறமை மிகுந்த இசையமைப்பாளர்கள் உள்ளனர். மேத்தா, வைரமுத்து, ஜாம்பவான் வாலி போன்ற ஆற்றல் மிக்க கவிஞர்கள் உள்ளனர். ஆனால் ஏதோ ஒரு விதமான வேகச் சுழற்சியில், திறமை முழுவதையும் இவர்கள் வெளிக்காட்ட இயலாமல் உள்ளனர். நிதானத்துடன் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு ஒத்துழைத்து இயங்கினால் நிலைமை அபிவிருத்தி அடையும்.

— டி. எஸ். கிருஷ்ணன்,
இரண்டாமாண்டு பொறியியல்.
(மெக்கானிகல்),
நேஷனல் பொறியியல் கல்லூரி,
நாலாட்டின்புத்தூர்,
கோவில்பட்டி தாலுகா.

## இளித்துவிடும் தங்க முலாம்!

திரைப்படப் பாடல்களில் அதிகம் கவர்வது இசையே. இசை நன்றாக இல்லை என்றால் பாடலில் இனிமை இருக்காது. இக் காலத்தில் பெரும்பான்மையான பாடல்களில் பொருளும் இல்லை. சுவையும் இல்லை. இரட்டை அர்த்தமுள்ள ஆபாசப் போர்வையால் போர்த்தப்படுகின்றன. இசை என்ற மேகம் பாடல் வரிகளின் களங்கத்தை மூடி மறைக்கிறது. இது மனத்துக்கு வேதனை தரும் ஒன்றே.

'துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ
இன்பம் சேர்க்க மாட்டாயா?'

இது போன்ற பாடல் வரிகள் இதமாக மனத்தை வருடும். என்றும் நிலைத்து நிற்கும் இலக்கிய நயம் வாய்ந்தவை. இதை விடுத்து,

'வாங்கடா என் மச்சிகளா
வெங்காய பஜ்ஜிகளா,

எனும் பாடல் வரிகள் மனத்துக்கு வேதனையைத் தருகிறது. 'இசை' என்ற தங்க முலாம் பூசப்பட்டாலும் வெகு சீக்கிரம் ஈயென்று இளித்து விடுகிறது.

— குமாரி ஆர். இராஜலக்ஷ்மி,
பி. ஏ. ஆங்கிலம்,
மூன்றாம் ஆண்டு,
மீனாட்சி கல்லூரி,
கோடம்பாக்கம், சென்னை — 24.

---

தன் விருப்பத்துக்கு இசைந்த வேலையாக இருந்தால் பெரிய முட்டாளும் கூட அதனை முடித்துவிடக் கூடும். ஆனால் எந்த வேலையையும் தன் விருப்பத்துக்கு ஏற்றதாக மாற்றுபவன் எவனோ அவனே அறிவாளி.

—விவேகானந்தர்

தகவல்: நல்லாலம் காசிதாசன்.


* பரிசு பைக்!

* மிக்கேல்

# அபூர்வ தலைவர் பெற்ற அன்புப் பரிசு!

கள்ளிகுளம் கிராமத்துக்குச் செல்லுவோர் ஒரு டம்ளர் தண்ணீர் கேட்டால், ஊர் மக்கள் யோசித்து விட்டுப் போனால் போகிறதென்று அரை டம்ளர் கொடுப்பார்கள்! பின்னே, இருபது கிலோ மீட்டர் போய் வள்ளியூரிலிருந்துதான் குடிதண்ணீர் கொண்டு வர வேண்டும் என்றால் சும்மாவா! ஆடி மாசம் இந்த ஊரில் மாதா கோவில் திருவிழா நடக்கும் போது ஒரு டம்ளர் தண்ணீர் இரண்டு ரூபாய் வரை விற்கும்!

— இந்தப் பரிதவிப்பு நிலை, நல்ல காலமாக இப்போது பழங்கனவாகி விட்டது. திருநெல்வேலிக்கருகே உள்ள கள்ளிகுளத்தில் நிலவிய குடிநீர்ப் பஞ்சத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தவர் பஞ்சாயத்துத் தலைவர் மிக்கேல்.

மிக்கேல் 1970 இல் பஞ்சாயத்துத் தலைவர் ஆன போது, வள்ளியூரிலிருந்து குழாய்கள் மூலமாகத் தண்ணீர் கொண்டு வருவதால் மட்டுமே தண்ணீர்ப் பிரச்னை தீரும் என்று உணர்ந்தார். அந்தத் திட்டத்தைத் தீட்டி நடைமுறைப் படுத்த ஆவன செய்யலானார்.

ஒன்பது வருடங்களாகியும் திட்டத்தை நடைமுறைப்படுத்த முடியவில்லை. இதற்குள் தனி அதிகாரி ஆட்சி முறை அமுலுக்கு வந்து விட்டது. ஆனால் மிக்கேல் 'நமக்கினி பொறுப்பில்லை' என்று சும்மா இருந்து விடவில்லை. கள்ளிகுளத்துக்குக் குடிநீர் வந்து சேர வேண்டும் என்பதற்காகச் செல்வாக்குப் படைத்த பல பிரமுகர்களையும் பார்க்க நடையாய் நடந்தார்.

1985 இல் மீண்டும் பஞ்சாயத்துத் தலைவரானார் மிக்கேல். இந்தச் சமயத்தில் தான் கள்ளிகுளத்துக்கு வள்ளியூரிலிருந்து தண்ணீர் கொண்டு வரும் திட்டம் அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்று, தண்ணீர்த் தொட்டி கட்டுவதற்கு அடிக்கல்லும் நாட்டப்பட்டது.

ஆனால் புதிய சோதனைகள் கிளம்பின. பைப் லைன் போட, நேஷனல் ஹைவேஸிடமும் ரயில்வேயிடமும் ஒப்புதல் வாங்க வேண்டியிருந்தது. இது இலேசான காரியமாக இல்லை. மிக்கேல் பலமாகப் போராடி இதைச் சாதித்தார். பிறகு பைப்லைன் பணிகளைப் பார்வையிடத் தினமும் வள்ளியூர் வரை சைக்கிளிலோ கால்நடையாகவோ போய் வர ஆரம்பித்தார்.

ஊருக்குத் தண்ணீர் கொண்டு வருவதற்காக நடையாய் நடந்த பஞ்சாயத்துத் தலைவருக்கு ஒரு வாகனம் வாங்கித் தந்தால் என்ன? என்று கள்ளிகுளம் வாசிகள் யோசிக்க ஆரம்பிக்கும் அளவுக்கு மிக்கேலின் உழைப்பு மெய்யானதாக, தன்னலமற்றதாக இருந்தது. அப்போது தான் பம்பாயில் வேலை பார்த்து வந்த கள்ளிகுளத்துக்காரர் ஆனந்தராஜ், தானே அந்த அன்பளிப்பை மிக்கேலுக்கு வாங்கித் தர முன்வந்தார்.

TN — 72 — 4376 என்கொண்ட ராஜ்தூத் மோட்டார் சைக்கிள், ''மிக்கேலுக்கு ஆனந்தராஜ் கொடுத்த ஆத்மார்த்தமான அன்பளிப்பு'' என்கிறார்கள் கள்ளிகுளத்து மக்கள். அவர்களில் சிலரைச் சந்தித்துப் பேசினோம்:

●● ''இந்த ஊருக்குத் தண்ணீர் கொண்டு வர, தலைவர் தம் சொந்தப் பணத்தைச் செலவழித்து பஸ்ஸிலே போய் வருவார். ஒரு முறை நான் கடையில் என் பைக்கோடு நின்று கொண்டிருந்தேன். 'அவசரமாக அம்பாசமுத்திரம் போய், தண்ணீர் விஷயமாகக் கலெக்டரைப் பார்க்கணும் — என்னை அழைத்துப் போகிறாயா?' என்று


* சேவியர்

* ஜெகதீசன்

மிக்கேல் கேட்டார். இத்தனைக்கும், அப்போது அவர் பஞ்சாயத்துத் தலைவராகக் கூட இல்லை. எனக்கு அவ்வளவு தூரம் போய் வர அவகாசம் இல்லை. பஸ் ஸ்டாப் வரைதான் கொண்டு விட்டு வந்தேன். இது போல் எவ்வளவு பயணங்களை எங்களுக்காக அவர் மேற்கொண்டிருக்கிறார்!'' என்று பாராட்டினார் ஜெகதீசன்.

●● ''ஆடி மாசம், மாதா கோவில் உற்சவத்தன்று 'வாட்டர் டாங்' திறக்கப்பட்டு, முதன் முதலில் தண்ணீர் வருவதாக இருந்தது. விடிந்தால் திருவிழா; ஆனால் பைப் லைன் வேலைகள் முடியவில்லை. நீங்கள் நம்ப மாட்டீர்கள்! இரவு ஒரு மணிக்கு மண் வெட்டி எடுத்துத் தாமும் பைப் லைனுக்குப் பள்ளம் தோண்டினார் மிக்கேல். சொன்ன நாளில் தண்ணீர் வந்து விட வேண்டும் என்பதில் அவ்வளவு ஆர்வம் அவருக்கு!'' என்று நெகிழ்ந்து போனார் ஜான்சன்.

●● கள்ளிகுளம் பள்ளியில் வேலை பார்க்கும் சேவியர் ''தண்ணீர்னு இல்லைங்க; எந்தப் பிரச்னையோட அவர் இட்டே போனாலும் தன்னால் முடிஞ்சதைச் செய்யத் துடிப்பாய் இருப்பார்'' என்று மிக்கேலைப் பாராட்டினார்.

''மத்தவங்க கஷ்டத்தைத் தம் கஷ்டமா நினைப்பார். விவசாயக் கடன் வேணும்னு போனா, உடனே வாங்கித் தந்துடுவார். கள்ளிகுளத்துல ஆஸ்பத்திரி இல்லாம, ஒரு அவசரத்துக்குக் கூட வள்ளியூருக்கோ, பன்னிரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ராதாபுரத்துக்கோ போய்க்கிட்டிருந்தோம். அரசாங்கத்தை அசையச் செய்து இங்கேயே ஆஸ்பத்திரி கட்ட வைத்துள்ளார். நிறைய இணைப்புச் சாலைகள் இவருடைய முயற்சியால் போடப்பட்டுள்ளன.''

●● பல ஆண்டுகளாகக் காங்கிரஸில் இருந்து வரும் மாசிலாமணி ராஜ் என்பவர், "தி. மு. க. வைச் சேர்ந்த மிக்கேலுக்குக் கட்சி, மத வேறுபாடெல்லாம் அடியோடு கிடையாதுங்க. எந்தக் கட்சி தலைமையில் இருந்தாலும் கள்ளிகுளத்துல ஒரு நல்ல காரியம் மிக்கேல் இல்லாம நடக்கவே நடக்காது'' என்று மனப்பூர்வமாகச் சொன்னார்.

●● ''அதிகம் படிக்கலைன்னாலும் காமராஜர் போலவங்க நம்ம தலைவர்...'' என்று மிக்கேலைப் பற்றிக் குறிப்பிட்ட புஷ்பா சற்குணம், கள்ளிகுளம் மகளிர் மன்றத்தின் மூலம் பெண்கள் கல்வியின் அவசியத்தை வற்புறுத்தி வருகிறார். கடந்த மகளிர் ஆண்டில் மன்றம் துவக்கப்படவும் இத்திட்டம் துவக்கப்படவும் காரணமாய் இருந்தவர் மிக்கேல்தான்.

கள்ளிகுளத்துக் காமராஜரைச் சந்தித்துப் பாராட்டுக்களைத் தெரிவித்தோம்.

''ஊர் மக்களின் உதவியும் ஒத்துழைப்பும் இருப்பதால்தான் எதுவுமே சாத்தியமாகிறது'' என்று அடக்கத்துடன் கூறினார். ''அப்பா, அம்மா சின்ன வயசிலேயே இறந்து விட்டதனால நான் ஆறாவது வரைதான் படிச்சேன். அது கூடக் கூலி வேலை செய்துதான் படிக்க முடிஞ்சுது. வள்ளியூரில் கொஞ்சம் காலம் காண்ட்ராக்ட் தொழிலாளியாக வேலை பார்த்தேன். பிறகு மெதுவா ஒரு சின்ன மளிகைக் கடை வைச்சேன். நியூஸ் ஏஜன்ட் ஆனேன்... தி. க. வில் இருந்த எனது தாத்தாவுடைய பாதிப்


* ஜான்சன்

* மாசிலாமணிராஜ்

பினாலே அரசியலில், பொதுத் தொண்டில் ஈடுபாடு வந்தது. நான் செய்ய வேண்டியது இன்னும் நிறைய இருக்கு...'' என்றார்.

கிரேஸ் என்ற பெண்ணைக் காதல் மணம் புரிந்து கொண்ட மிக்கேலுக்கு ஆறு குழந்தைகள். அனைவரும் படித்து, நல்ல நிலையில் இருக்கிறார்கள்.

மிக்கேலிடம் விடைபெற்ற போது, வெளிர் சாம்பல் நிறத்தில் நின்ற ராஜ்தூத் மோட்டார் சைக்கிள் கண்ணில் பட்டது.

''ஒரு நிமிஷம்...'' என்று நம்மை நிறுத்திய மிக்கேல் ஒரு செம்புடன் திரும்பி வந்தார். ''எங்கள் ஊர் தண்ணியைக் குடிக்க வேண்டாமா?'' என்றபடி அவர் நீட்டிய செம்பை வாங்கித் தண்ணீரைக் குடித்தோம்.

கள்ளிகுளம்வாசிகளின் மனங்குளிரச் செய்த அந்தத் தண்ணீரில் உழைப்பின் சுவை தெரிந்தது!

**— தமயந்தி.**

படங்கள்: **சுந்தர்.**

**வாசகர் யோசனை :**
**கவிட் ரவி,**
**கும்பகோணம்.**



• சாரதா ரமேஷ்

# வண்ண மலர்களில் வளமான வியாபாரம்

கமலஹாசனின் பிறந்த நாளன்று அவரது பம்பாய் நண்பர்கள் மட்டும் ஒரு டஜன் பூங்கொத்துக்களை அனுப்பினார்கள். இது நடந்து, ஒரு வாரத்தில் சரிகாவின் பிறந்த நாள் வந்தது. இதற்கும் பம்பாயிலிருந்து பல்வேறு நபர்கள் கிட்டத்தட்ட ஒரு டஜன் பூங்கொத்துக்களை அனுப்பினார்கள்.

இந்தப் பூங்கொத்துக்களெல்லாம் பம்பாயிலிருந்து சென்னைக்கு விமானத்தில் பறந்து வரவில்லை! பம்பாய் மலர் வியாபாரி ஒருவரிடம் ஆர்டர்கள் தரப்பட, அவர் சென்னையிலுள்ள 'கிரீன் ஹவுஸ்' மலர்க் கடைக்கு போன் செய்து விவரங்களைக் கொடுத்து விட்டார். கிரீன் ஹவுஸ் உரிமையாளர் மோஹினி ராணி குப்தா, விதவிதமான மலர்க் கொத்துக்களை ஆர்டர்களுக்கு ஏற்பத் தயாரித்து கமல் வீட்டுக்குக் குறித்த தேதியில் அனுப்பினார். ஒவ்வொரு மலர்க் கொத்தும் ரூ 200, 250 வரை விலை பெறும்.

"பம்பாயில் உள்ள ஒரு மலர் வியாபாரியுடன் செய்து கொண்டுள்ள ஏற்பாடு இது. எங்கள் வாடிக்கையாளர்கள் பம்பாயில் உள்ளவர்களுக்கு மலர்க் கொத்துகள் அனுப்ப விரும்பினால், நாங்கள் இந்த பம்பாய் வியாபாரி மூலமாகத்தான் ஆர்டரைக் கொடுப்போம்" என்றார் மோஹினி ராணியின் கணவர். வெளிநாடு சென்றிருந்த தமது மனைவியின் சார்பாக மேலும் சில விவரங்களைத் தந்தார்:

"தினமும் பெங்களூரிலிருந்து பூக்களை வரவழைக்கிறோம். சில அலுவலகங்களின் வரவேற்பு அறைகளிலும் மேலதிகாரிகளின் அறைகளிலும் வாடிக்கையாக மலர் அலங்காரம் செய்து வருகிறோம். விஜயா ஆஸ்பத்திரியில் எங்கள் கிளை ஒன்று இருக்கிறது. இதிலும் வியாபாரம் சுறுசுறுப்பாக

நடைபெறுகிறது. கோயன்கா குடும்பத்துக்கு வாடிக்கையாக மலர்களை 'சப்ளை' செய்கிறோம். எல். வி. பிரசாத் அவர்களுக்குப் பிறந்த நாள் வந்தால் திரையுலகப் பிரமுகர்கள் எல்லோரும் எங்களிடம்தான் மலர்க் கொத்துகள் ஆர்டர் செய்வார்கள். ஏக்நாத் வீடியோ ஸ்டுடியோவில் ஒவ்வொரு ஒளிப்பதிவுக்குப் பின்னும் சம்பந்தப்பட்ட வி. ஐ. பி. கலைஞர்களுக்கு மலர்க் கொத்து வழங்குகிறார்கள். அவற்றை நாங்கள்தான் 'சப்ளை' செய்கிறோம்...'' என்று பிரபலங்களின் பட்டியலை அளித்தார் குப்தா.

''சாதாரண மக்கள் உங்களிடம் மலர்கள் வாங்க மாட்டார்களா?'' என்றோம்.

''உயர் மத்தியதர வகுப்பினர் வாங்குவார்கள். இப்போதெல்லாம் தரமான திருமணப் பரிசுப் பொருள்கள் நூறு ரூபாய்க்குக் குறைந்து கிடைப்பதில்லை. கொடுக்கும் பொருள் உபயோகமாய் இருக்குமா என்றும் தெரியாது. அதனால் ஐம்பது ரூபாய்க்குள் ஒரு மலர்ச் செண்டு வாங்கித் தந்து விடுகிறார்கள். நளினமான முறையில் வாழ்த்து தெரிவித்த திருப்தி அவர்களுக்குக் கிடைக்கிறது'' என்றார் குப்தா.

கிரீன் ஹவுஸின் 'ஸ்பெஷாலிட்டி,' திருமணங்களுக்கு அவர்கள் மாதா கோயில்களில் செய்யும் மலர் அலங்காரங்கள் தானாம். இவை பட்ஜெட்டுக்கு ஏற்றபடி செய்து தரப்படுகின்றன.

**ப**ம்பாய்க்கும் சென்னைக்குமிடையே மலர்ப் பரிமாற்றம் நடப்பது போல், உலகின் எந்தப் பகுதியிலும் மலர்ப் பரிமாற்றம் செய்து கொள்ளலாம் என்று விளம்பரம் செய்கிறார்கள் சில மலர்க் கடைகளில். இத்தகைய கடைகளுள் ஒன்றான டியூ டிராப்ஸ் சென்னை, நுங்கம்பாக்கம் ஹை ரோட்டில் உள்ளது. 'டியூ டிராப்ஸ்' (பனித்துளிகள் என்று பொருள்) பெயரைப் போலவே கடையும் கவிதை நயத்துடன் திகழ்கிறது. சின்னஞ்சிறு அறைதான். ஒரு பக்கத்தில் தாழ்வான கொலுப்படிகள் போன்ற அமைப்பில், உயரமான ஜாடி

• போஷினி ராணி குப்தா



• வதா அனந்தராமன்



# நண்பர்கள்

இயக்குனர் திருமதி ஷோபாவுக்கு ஒரு சின்னப் பாராட்டு — கல்லூரி மாணவ — மாணவியரிடையே நிகழும் போட்டா போட்டிகளும், சில்லறை விஷமங்களும், தொடக்கத்தில் அவர்களை அறிமுகப்படுத்திய விதமும் மிகமிக இயல்பு.

என்றாலும், கொட்டும் மழையில் அத்தனை மாணவர்களும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க, மம்தா மாடியில் நின்றிருக்கும் நீரஜ்ஜை நோக்கித் தன் காதலை வெட்ட வெளிச்சமாகக் கூவி வெளிப்படுத்துவது சினிமாத்தனமான மிகை.

அந்த இளம் சிட்டுக்களின் காதலுக்குத் துணை நிற்கும் கல்லூரி முதல்வர் — அவர் வாழ்வில் நடைபெற்று, எந்நேரமும் அவர் நினைவில் படர்ந்திருக்கும் அந்தச் சோக நிகழ்ச்சி... நாகேஷ் அந்தப் பாத்திரமாகவே வாழ்ந்திருக்கிறார்.

பிரதாப் சந்திரனின் வில்லத்தனத்தில் நாசூக்கான குரூரம். என்றாலும், கவிதையாகச் சென்று கொண்டிருக்கும் காதல் கதையினூடே அவர் அறிமுகப்படுத்தும் ஏ.கே. 47 ரகத் துப்பாக்கிக் கலாசாரம் அந்தப் போக்கைத் திசை திருப்பி மசாலாத் தனத்துக்கு வழிவகுத்து விடுவது திரைக் கதையமைப்பில் நேர்ந்து விட்ட சோகம்.

கொஞ்ச நேரமே வந்தாலும் 'ஆச்சி' மனோரமாவின் ஆட்சி அட்டகாசம். அவருக்குத் துணை — குமரி முத்துவும் அவருடைய வெடிச் சிரிப்புகளும்.

தந்தையின் வீட்டிலிருந்து மம்தா தப்பிச் சென்றபின் நடைபெறுவதாக விவரிக்கப் படும் நிகழ்ச்சிகள் குடுகுடுப்பைக்காரனின் ஒட்டுப் போட்ட சட்டை.

இடைவேளை வரை அழகான சிறுகதை. அதன்பின் — ப்ச்.

— சி. ஆர். கே.

களில் புத்தம் புது பூக்கள் — பனீரிடும் வண்ண நட்சத்திரங்களைப் போன்ற 'ஆஸ்டர்கள்', செவ்விளநீர்க் காயின் நிறத்தில், பிஞ்சுக் குழந்தை கண்ணுறங்குவது போன்ற தோற்றத்தில் இதழ் விரியாத ரோஜாக்கள்; பேபீஸ் பிரெத் (குழந்தையின் மென்மூச்சு) என்ற மனம் மயக்கும் பெயர் கொண்ட பொடிப் பொடியான வெள்ளைப் பூ...

ரம்மியமான சூழலில் நம்மை வரவேற்கிறார் 'டியூ டிராப்ஸ்' உரிமையாளர் சாரதா ரமேஷ்.

''அயல்நாட்டுக்கு மலர்கள் அனுப்புவது பற்றிச் சொல்வதற்கு முன் இவ்வளவு கலை நயத்துடன் நீங்கள் கடையை எப்படி வைத்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்களேன்'' எனக் கேட்டோம் சாரதாவிடம்.

''மலர்களிடம் உள்ள பிரியம்தான் காரணம்... இத்தொழிலை ஆரம்பத்தில் பொழுது போக்காக மட்டுமே செய்து வந்தேன்...'' என்று ஆரம்பித்துத் தமது அனுபவங்களை விவரித்தார் சாரதா.

''எனது தாய் இகிபானா என்ற மலர் அலங்காரக் கலை நிபுணராகத் திகழ்ந்தார். அவர் காலமான போது எனக்குப் பதின் மூன்றே வயது. என் திருமணத்துக்குச் சீர் வரிசையாக ஒரு மலர்க் கடையைத் தர வேண்டும் என்று அப்பாவிடம் கேட்டுக் கொண்டு கண் மூடினார் அம்மா. அதன்படி ஒரு கடையை ஸ்தாபித்துக் கொடுத்து விட்டார் அப்பா. அதில் ஓரளவு வியாபாரம் ஆனாலும் எனக்குச் சாதனை உணர்வே ஏற்படவில்லை. இங்கிலாந்தில் மலர்த் தொழிலை மிக வெற்றிகரமாக நடத்தி வரும் லூயிஸ் பெப்பர் என்ற பெண் மணியைப் பற்றிக் கேள்விப்பட்டதும் இங்கிலாந்துக்குப் போக முடிவு செய்தேன்.

''ஆறு மாதங்கள் இங்கிலாந்தில் தங்கி, 'பெப்பர் ட்ரீ' என்ற பெயருடைய (லூயிஸ் பெப்பரின் கணவர் மிளகு வியாபாரம் செய்து பணக்காரரானதால் அப் பெயர்!) அவரது கடையில் பயிற்சி எடுத்துக் கொண்டேன். மலர்களை ரகம் பிரிப்பது, பாதுகாப்பது, சுத்தம் செய்வது, அவற்றை எப்படிப் பிடித்துக் கொள்வது, கையாள்வது என்று பல நுணுக்கமான விஷயங்களைக் கற்றுத் தந்தார்.

''Interflora என்ற அமைப்பில் உறுப்பினர் ஆனால், உலகின் பல பகுதிகளிலிருந்தும் ஆர்டர்கள் வரும் என்று தெரிந்து கொண்டதும் இங்கிலாந்தில் ஸ்லீஃபர்ட் என்ற பகுதியில் உள்ள அந்த அமைப்பை அணுகினேன். இந்திய மலர் வியாபாரிகளிடம் அவர்களுக்குக் கசப்பான அனுபவங்கள் பல ஏற்பட்டிருந்ததால் என்னை இலேசில் உறுப்பினராக ஏற்க மறுத்தார்கள். இரண்டு நேர்முகத் தேர்வுகளும், ஓர் எழுத்துத் தேர்வும் நடத்தி நான் அதில் தேறிய பின், வருடத்துக்கு இருமுறை மட்டுமே கூடும் அவ்வமைப்பின் சிறப்புக் கமிட்டியின் முன் என் விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தார்கள்.

சிறப்புக் கமிட்டி பச்சைக் கொடி காட்ட, ஆயிரம் பவுண்ட் டெபாஸிட் கட்டி இன்டர்ஃப்ளோரா உறுப்பினரானேன்.

''சென்னையில் தற்போது மூன்று இன்டர்ஃப்ளோரா உறுப்பினர்கள் உள்ளனர். (இந்தியா முழுவதிலுமாகப் பதினான்கு). உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் சென்னைக்கு மலர்ச் செண்டு அனுப்ப விரும்புவோர். இருப்பார்கள் அல்லவா? இவர்கள் தங்கள் உள்ளூர் இன்டர்ஃப்ளோரா உறுப்பினரிடம் ஆர்டரைக் கொடுப்பார்கள். அந்த உறுப்பினர், ஸ்விஃப்பர்டில் உள்ள'| மத்திய இன்டர்ஃப்ளோரா அலுவலகத்துக்கு ஆர்டரை அனுப்புவார். மத்திய அலுவலகம், முறை வைத்துக் கொண்டு, சென்னையில் உள்ள மூன்று உறுப்பினர்களுள் யாரேனும் ஒருவரிடம் அந்த ஆர்டரை ஒப்படைக்கும். சென்னை வாசிக்கு அயல்நாட்டு நண்பரின் அன்பளிப்பாக நாங்கள் அந்த மலர்ச் செண்டை அனுப்பி விடுவோம். அதற்கான சன்மானத் தொகை (அன்னியச் செலாவணி) ரிசர்வ் வங்கியில் ரூபாயாக மாற்றப்பட்டு எங்களுகக்கு வந்து சேரும். அதே போல் இங்கிருந்து வெளிநாடுகளுக்கு ஆர்டர்கள் அனுப்ப விரும்புவோர் எங்கள் மூலமாக அனுப்பலாம். அயல்நாட்டுக்கு மலர்ச் செண்டு அனுப்பக் குறைந்தபட்சம் எண்ணூறு ரூபாய் ஆகும். பத்து நாட்களுக்கு முன்னதாக ஆர்டர் கொடுக்க வேண்டும். அவசர ஆர்டராக இருந்தால் சர்விஸ் சார்ஜ் கூடுதலாக வசூலிப்போம்...''

இந்தக் கடையை ஆரம்பித்த போது (1982) நாளொன்றுக்கு ஒரு மலர்ச் செண்டு மட்டுமே விற்று வந்த சாரதா, இன்றைக்குப் பத்து முதல் பதினைந்து செண்டுகளைத் தினமும் விற்கிறார். ''பெங்களூர் மலர்ப் பண்ணைகளைக் குத்தகைக்கு எடுத்து வாடிக்கையாகப் பூக்களை அனுப்பும் கான்ட்ராக்டர்களுக்குப் பெரிய தொகைகளை (50 முதல் 60 ஆயிரம்) டெபாஸிட் ஆகக் கட்டி, தரமான, புதிய பூக்களை வரவழைக்கிறேன். வியாபாரம் நன்றாக நடக்கிறது. 25 முதல் 30 சதவிகிதம் வரை லாபம் கிடைக்கிறது'' என்கிறார்.

நிறைய கம்பெனிகளுக்கு வாடிக்கையாக மலர் அலங்காரங்கள் செய்து வந்த சாரதா இப்போது அந்த வாடிக்கைகளைக் குறைத்துக் கொண்டு தனி நபர்களுக்கே அதிகமாக விற்கிறார். ''தன் அம்மாவுக்காக, இரண்டு ரூபாய்க்கு ஒரு சின்னக் கொத்துப் பூ வாங்கிச் செல்லும் பள்ளிச் சிறுமியின் சந்தோஷத்தைப் பார்க்கவே பூரிப்பாய் இருக்கிறதே!'' என்று கூறும் சாரதாவுடைய வெற்றியின் ரகசியம் புரிகிறது!

''அம்மாவுக்குச் சின்ன மலர்க் கொத்துத் தரும் சிறுமிகள் ஒரு ரகம் எனில், காதலனுக்கோ காதலிக்கோ மலர்ச் செண்டு வாங்கிச் செல்லும் இளையதலைமுறையினர் இன்னொரு ரகம்'' என்கிறார் லதா அனந்தராமன். இவர் ஆழ்வார் பேட்டையில் 'அனுலாஸ்' என்ற மலர்க் கடை வைத்துள்ளார்.

''வாரக் கடைசியில்தான் இளைஞர்கள் கூட்டம் அதிகமாக வரும். சனி, ஞாயிறில் வெளியே போகும் போது, மனம் கவர்ந்தவருக்கு மலர்ச் செண்டு வாங்கிச் செல்வார்கள். நோய்வாய்ப்பட்டு ஆஸ்பத்திரியில் படுத்துள்ளவருக்கும் மலர்ச் செண்டுகள் அனுப்பப்படுகின்றன. கல்யாண சீசனில் வியாபாரம் நன்றாக நடக்கும். மார்கழி மாசம் மீண்டும் 'டல்' ஆகி விடும். அதனால் தொடர் வருமானத்துக்காகச் சில கம்பெனிகளில் கான்ட்ராக்ட எடுத்து மலர் அலங்காரம் செய்து வருகிறோம். ஒன்று விட்டு ஒரு நாள் செய்யப்படும் ஒவ்வொரு அலங்காரத்துக்கும் இருபத்தைந்து ரூபாய் கட்டணம். இதைத் தவிர கிறிஸ்துவக் கல்யாணங்களுக்கு மணமக்கள் கையில் வைத்துள்ள வட்டமான அடர்ந்த செண்டுகளும் தயாரிக்கிறோம்...

''அன்பை அழகுணர்ச்சியுடன் வெளிப்படுத்த விரும்புவோர் எங்கள் பூங்கொத்துக்களின் துணையைத்தான் நாட வேண்டும். அத்தகையவர்கள் இருக்கும் வரை எங்கள் வியாபாரம் வளமானதாகவே இருக்கும்'' என்கிறார் லதா அனந்தராமன்.

— சீதா ரவி

அட்டை வண்ணப்படம், படங்கள்: யோகா

அட்டையில்: குமாரி காயத்ரி.

**அடுத்த இதழ்**

**குழந்தைகளுக்கான மருத்துவம் முதல் முதியோர்களுக்கான மருத்துவம் வரை எத்தனையோ செய்திகள்!**

மருத்துவச் சிறப்பிதழ்




நிலத்தை விடுவிச்சாச்சு... தேசியக் கொடியை ஏத்துவோம்!
அதோட இதையும் ஏத்துவோம்...
வங்க தேசத்தில் ஜனநாயக மறுமலர்ச்சி
என்னடா இது... பல ராக்கெட் புஸ்ஸுனு போகுது...
அமெரிக்க விமானங்க- ளுக்கு பெட்ரோல் மறுப்பு
இந்தியா அணுகுண்டு பரிசோதிக்கும்- பயமுறுத்தல்
சூப்பர் பிரதமரா நடந்துக்க முயற்சி பண்ணா இப்படிதான்...



# கல்கி

1991 மார்ச் 10
மலர் : 49 இதழ் : 32
பிரமோதூத மாசி 26



## ரணகளத்தினிடையே ஒரு விடியல்

வளைகுடாப் போரினால் ஏற்பட்டுள்ள பெருமளவு உயிர்ச் சேதத்துக்கும், பொருட்சேதத்துக்கும் ஈராக் அதிபர் சத்தாம் உசேன் முழுப்பொறுப்பு ஏற்க வேண்டியவராகிறார். சிறிய நாடாகிய குவெய்த்தை ஆக்கிரமித்துப் பேராசையுடன் அதனை ஈராக்குடன் இணைத்துக் கொண்டதை உலகநாடுகள் அனைத்தும் கண்டித்தன. அரபு நாடுகள் பலவும் உறுதியாக எதிர்த்தன. ஐ. நா. முதலில் பொருளாதார முற்று கைக்கும் பின்னர் ஆயுதம் தாங்கிய போருக்கும் அனுமதி வழங்கியது. இந்தப் போரில் தம்மால் ஜெயிக்க முடியாது என்பது சத்தாமுக்கு நன்றாகவே தெரிந்திருக்க வேண்டும். ஆயினும், மூடப்பிடிவாதமும், வறட்டுக் கௌரவமும் அவரை ஆட்டிப் படைத்து விபரீதங் களுக்கு வழிவகுத்தன. அமெரிக்காவுக்கு எதிராக ருஷ்யா செயல்படும் என்றும் அரபு நாடுகள் மத உணர்வு காரணமாகத் தம்மை விட்டுக் கொடுக்காது என்றும் அவர் போட்ட கணக்குகள் பிசகி விட்டன. அமெரிக்கா தனிப்பட்ட முறையில் இந்தப் போரில் இறங்கவில்லை, ஐ. நா. ஆதரவு என்ற தார்மீக பலத்துடன் இயங்குகிறது என்பதைப் புரிந்து கொண்டு அவர் கௌரவமாகக் குவெய்த்தை விட்டு வெளியேறி இருக்கலாம். செய்யத் தவறிவிட்டார். விளைவு, ஈராக்கிய மக்களுக்கும், குவெய்த் மக்களுக்கும் சொல்லி முடியாத துன்பங்கள்.

அமெரிக்கா கடைசிக் கட்டம் வரை நேரடி மோதலில் இறங்காமல், விமானங்கள் மூலம் குண்டுவீசித் தாக்கியும், ஏவுகணைகளைச் செலுத்தியும் ஈராக்கைப் பணிய வைப்பதை நோக்கமாகக் கொண்டு, வெற்றி பெற்றுவிட்டது. ஆனால் இந்த வெற்றியைப் பெருமைப்படக்கூடிய வெற்றியாகக் கருத முடியவில்லை. சத்தாம், குவெய்த்தை விட்டு வெளியேறுவதாக அறிவித்த பிறகும் அமெரிக்கா போரைத் தொடர்ந்து நடத்தியது குரூரமான செயலாகும். அமெரிக்காவுக்கு ஏகப்பட்ட பொருள் நஷ்டம் ஏற்பட்டதுடன் வீரர்கள் பலரையும் அது இந்த விடுதலைப் போரில் பலி கொடுத்திருக்கிறது. இது ஆத்தி ரத்தைக் கிளப்பி, ஈராக் பணிந்த பிறகும் அதனைத் தாக்கச் செய்திருக்கிறது. சத்தாம் உசேன் மீண்டும் ஒரு சக்தி வாய்ந்த ராணுவத் தலைவராக வளர்ந்துவிடக்கூடாது என்ற நோக்கில் அமெரிக்கா செயல்பட்டிருக்கிறது.

இந்தப் போரின் நிகர லாபம் என்னவெனில், இருதரப்பிலும் நவீனப் போர்க் கருவிகள் பயன்படுத்தப்பட்டு, அவை நன்கு இயங்குகின்றன என்பதை நிர்ணயிக்கும் சோதனைக் களமாக யுத்த பூமி விளங்கியதுதான்.

போர் முடிந்த பிறகும் பகைமை உணர்வுகள் மங்காது நீண்ட காலம் தொடரும். இந்த உணர்வுகளை அமைதிப்படுத்தி, ஈராக்கிய, குவெய்த் மக்களுக்கு ஆறுதல் ஏற்படச் செய்து, அவர்கள் வாழ்க்கை சகஜ நிலைக்கு மீண்டும் திரும்ப முயற்சி மேற்கொள்ள வேண்டிய பொறுப்பு அமெரிக்காவுக்கும், அதன் நேச நாடுகளுக்கும் உண்டு.

இந்தப் போரின் போது இந்தியத் தலைவர்கள் நடந்து கொண்ட முறை மிகவும் விசனிக்கத்தக்கது. ஐ. நா. வின் நடவடிக்கைக்கு ஒரு பக்கம் ஆதரவு அளித்துவிட்டு இன்னொரு பக்கம் அமெரிக்க விமானங்களுக்கு எரிபொருள் அளிக்க முடியாது என்று கூறி நிறுத்தியது முரண்பாடானது. இத்தனைக்கும் அமெரிக்கா தனது போர் விமானங் களுக்கு எரிபொருள் கேட்கவில்லை. போக்குவரத்து விமானங்களுக்கே இந்தச் சலு கையைக் கோரியது. ராஜீவ்காந்தி வேறு, ஒரு ஸூப்பர் பிரதமர் போல் செயல்பட்டு, ''போரை முடிவுக்குக் கொண்டு வருகிறேன்'' என்று கூறிக் கொண்டு டெஹ்ரானுக்கும் மாஸ்கோவுக்கும் பறந்து கொண்டிருந்தார். இதை அவர் பிரதமரின் அனுமதி பெற்றே செய்திருந்தால் கௌரவமாக இருந்திருக்கும். ஆனால் அவ்வாறு செய்யாதது, குறைந்த பட்சம் அயல்நாட்டுக் கொள்கைகளில் கூட நம்மிடையே ஒற்றுமை இல்லை என்பதை உணர்த்தி நகைப்புக்கு இடமளிப்பதாக ஆகிவிட்டது. 'அமெரிக்கா இந்தப் போரில் அணுகுண்டு பிரயோகித்தால், இந்தியா அணுகுண்டு தயாரிக்க நேரிடும்' என்று ராஜீவ் வல்லரசுகளை மிரட்டியது பிரமாதமான சிரிப்புக் குண்டாகும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# குவிஸ் டைம்

இரண்டு சக்கர வாகனங்கள் பற்றிய பின்வரும் சில கேள்விகளுக்குப் பதில் சொல்லுங்களேன், பார்க்கலாம்:

1. ஸ்கூட்டர் போன்றவற்றுக்குப் பெட்ரோல் போடும் போது கூடவே ஆயில் போடுவது எதற்காக?
2. 'கார்புரேட்டர்' — இதன் வேலை என்ன?
3. வண்டிகளை 50 சிசி, 100 சிசி. என்றெல்லாம் குறிப்பிடுவதன் பொருள் என்ன?
4. இரண்டு சக்கர வாகனங்களில், எரிவாயுக் கலவையைப் பற்ற வைக்கும் மின்சார பாகத்துக்கு என்ன பெயர்?
5. 'கியர்' என்பது என்ன?
6. விளக்கு, ஹாரன் இவற்றை இயக்கத் தேவையான மின்சாரம் எப்படிக் கிடைக்கிறது?

தொகுப்பு: மௌஷ்மி.

**விடைகள்:**

1. பிஸ்டன் பகுதி, சிலிண்டரில் ஏற்படுத்தும் உராய்வைக் குறைக்க.
2. எஞ்சினுக்குத் தேவையான சுத்தக் காற்று, எரிவாயு இவற்றைக் கலந்து உட்செலுத்தும் பாகம்.
3. சிலிண்டரினுள் பிஸ்டன் நகரும் பகுதியின் கன அளவு.
4. ஸ்பார்க் பிளக்.
5. வண்டியின் வேகத்தை மாற்ற உதவும், பல்வேறு அளவுள்ள பற்சக்கரங்கள் கொண்ட பகுதி.
6. 'மாக்னட்டோ' என்ற பகுதியில் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது.

## குடை வாங்கிய மாப்பிள்ளை!



குடை வாங்கப் புறப்பட்ட மாப்பிள்ளையிடம் மாமனார் சொன்னார்: "இந்த ஊரில் பேரம் பேசாமல் நடக்காது; என்ன விலைசொன்னாலும் அதில் பாதி விலைக்குக் கொடுக்கச் சொல்லிக் கேளுங்க."

'சரி' என்று கூறிப் புறப்பட்ட மாப்பிள்ளை, கடைக்காரர் குடை விலை நாற்பது ரூபாய் என்றதும், "இருபதுக்குத் தருவீங்களா?" என்றார்.

"சரி, முப்பது கொடுங்க" என்றார் கடைக்காரர்.

உடனே, "பதினைந்து ரூபாய்க்குத் தருவீங்களா?" என்று மாப்பிள்ளை கேட்கவும், கடைக்காரருக்குக் கோபம் வந்தது. "ஏன்யா, கொஞ்சம் ஏமாந்தா குடையை ஓசியிலேயே தட்டிட்டு போயிடுவே போலிருக்கே!" என்றார்.

"அப்படியானால் ரெண்டு குடையாக் கொடுத்துடுங்க" என்று மாப்பிள்ளை கூறவும், கடைக்காரர் தடால்!

— திருச்சி வானொலியில் கேட்டு எழுதியவர்: எஸ். ரமேஷ்.



பருகூர் ஜவுளிக் கடல்!

# நங்கூரம் பாய்ச்சிவிட்ட நடமாடும் வியாபாரம்!

இது ஜவுளிக் கடையல்ல; ஜவுளிக் கடல்!

— என்று பல ஜவுளிக் கடைக்காரர்கள் தீபாவளி, பொங்கல் சமயத்தில் வானொலியில் விளம்பரம் செய்யக் கேட்டிருக்கிறோம். ஆனால் நிஜமாகவே ஜவுளிக் கடலைப் பார்த்தது பருகூரில்தான்!

தர்மபுரி மாவட்டத்தில் கிருஷ்ணகிரியிலிருந்து 16 கி. மீ. தூரத்தில் உள்ளது பருகூர். இங்கே ஒரே வளாகத்தில் 134 ஜவுளிக் கடைகள்! கீழ்த்தளத்தில் 67 — மாடியில் 67. மாடியிலுள்ள கடைகள் சமீபத்தில்தான் திறக்கப்பட்டுள்ளதால் இன்னும் நிரம்பவில்லை. கீழேயுள்ள கடைகளிலெல்லாம், இந்தியாவின் பல்வேறு மில்களில் தயாரிக்கப்பட்ட வண்ண வண்ணத் துணிகள் குவிந்து கிடக்கின்றன! உலகத்திலுள்ள அத்தனை நிறங்களும் எண்ணற்ற ரகங்களுமாக அலங்காரமாக அணி வகுத்துப் பிரமிப்பில் ஆழ்த்துகின்றன.

ஒவ்வொரு கடையிலும் வாடிக்கையாளர்கள் ஆர அமர உட்கார்ந்து ஜவுளிகளைத் தேர்ந்தெடுக்க வசதியாக வெண் மெத்தைகள் விரிக்கப்பட்டுள்ளன. சிப்பந்திகள் வாய் நிறைய வரவேற்று, வகை வகையான துணிகளை, சளைக்காமல், புன்னகை மாறாமல் எடுத்துப் பிரித்துக் காட்டுகிறார்கள். சுறுசுறுப்பாக நடைபெறுகிறது வியாபாரம்.

ஒரே காம்ப்ளெக்ஸில் இவ்வளவு ஜவுளிக் கடைகளை வைக்க எப்படித் துணிந்தார்கள்? பருகூர் டெக்ஸ்டைல் பாரடைஸ் சங்கத்தின் தலைவரும் தெய்வானை டெக்ஸ்டைல்ஸின் உரிமையாளருமான பி. ஜி. சின்னப்பனிடம் கேட்டோம்.

''இந்த காம்ப்ளெக்ஸில் கடை வைத்துள்ள எல்லோருமே 1980 வரை நடமாடும்



பாஸ்கர்



முருகன்

ஜவுளியகங்களைத்தான் நடத்திக் கொண்டிருந்தோம். கடுமையான உழைப்பு! பம்பாய், சூரத் போன்ற இடங்களில் மொத்த விலைக்கு வாங்கி, தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா என்று பல மாநிலங்களிலும் அலைந்து திரிந்து வியாபாரம் செய்வோம். எண்பதுகளின் மத்தியில்தான் நாங்கள் ஜாதிய முறையில் இணைவது என்று முடிவு செய்தோம். அதன்படி 24 மனை தெலுங்கு செட்டியார் வகுப்பைச் சேர்ந்த 67 பேர் ஒன்றுகூடி இந்த காம்ப்ளெக்ஸைக் கட்டி முடித்தோம். குலுக்கல் முறையில் கடைகளை எடுத்துக் கொண்டோம். எட்டு வருடங்களாக இந்தக் கடைகளில் நடந்த சிறப்பான வியாபாரம், மாடியிலும் 67 கடைகளைக் கட்டும் துணிவையும் பொருளாதார பலத்தையும் எங்களுக்குக் கொடுத்துள்ளது'' என்றார் சின்னப்பன்.

'67 கடைகளுக்கும் வாடிக்கையாளர்கள் வருவார்களா? வியாபாரம் எப்படியிருக்கும்?' என்று கேட்ட போது சங்கச் செயலாளர் பி.சி. கிருஷ்ணன் சொன்னார்:

''வாடிக்கையாளர்கள்தான் எங்களுக்கு வழிகாட்டிகள்! நாங்கள் எல்லா ஜவுளிகளையும் பிரபல மில்களிலிருந்து நேரடியாகக் கொள்முதல் செய்கிறோம் என்பதும் இங்கு கிடைக்காத ரகங்களே இல்லை என்பதும் அவர்களுக்குத் தெரியும். அதனால்தான் கடன் வசதி தராதபோதிலும் கூட எங்கள் கடைகளில் வியாபாரம் நன்றாக நடக்கிறது.''

கிருஷ்ணன் கூறியதற்கு மேலும் வலு சேர்க்கும் விதமாகப் பேசினார் வாணி டெக்ஸ்டைல்ஸ் உரிமையாளர் பாஸ்கர்.



பி. சி. கிருஷ்ணன்



வில்லியம் • திருமுருகன்

''கடந்த எட்டு வருடங்கள் நிம்மதியாகவே கழிந்திருக்கின்றன. இன்னும் சொல்லப் போனால், பம்பாய், சூரத் மில்களில் தயாராகும் புது ரகப் புடைவைகளைப் பருகூரில் 'வெள்ளோட்டம்' விட்டுப் பார்க்கும் அளவுக்கு நாங்கள் பிரபலமடைந்துள்ளோம்.''

''எங்கள் சர்வீஸ்தான் ஸார் ஸ்பெஷாலிடி'' என்றார் மகேந்திரா டெக்ஸ்டைல்ஸ் உரிமையாளர் முருகன். ''தேவையான சரக்குகளைப் புரட்டிப் புரட்டிப் பார்க்கலாம். வாங்கித்தான் ஆக வேண்டும் என்று கட்டாயம் கிடையாது. நாங்கள் பொருளோடு பொறுமையையும் முதலீடு செய்திருக்கிறோம். அதன் நற்பலனை அனுபவிக்கிறோம்'' என்றார்.

பருகூர் டெக்ஸ்டைல்ஸ் பாரடைஸ்


அனுசூயா


பாபு

சங்கத்தின் பொருளாளர் கே. ஜி. கிருஷ்ணன் வியப்பூட்டும் தகவல் ஒன்றைத் தெரிவித்தார்.

''சுமார் ஓர் ஏக்கர் நிலப்பரப்பில் உள்ள இத்தனை பெரிய இடத்தைக் கட்ட நாங்கள் எந்த வங்கியிலும் 'லோன்' வாங்கவில்லை. எங்கள் சேமிப்பிலிருந்துதான் முதலீடு செய்தோம். கடுமையாக உழைத்தோம். இப்போதும் கடன் இல்லாமல் அவரவர் கடையில் நிம்மதியாக இருக்கிறோம். வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.''

**ப**ருகூரில் ஜவுளி எடுக்க வந்த வாடிக்கையாளர்கள் சிலரைச் சந்தித்தோம்.

'கன்னண்டஅல்லி' என்ற ஊரிலிருந்து வந்திருந்த அனுசூயா ''இங்கே எல்லாரும் அன்பா, நயமாப் பேசறாங்க; துணியும் மலிவாக் கிடைக்குது. என் தலைமுறைக்கு இங்கேதான் துணி எடுப்பேன்'' என்றார்.

''பட்டுப் பூச்சிக் கூண்டு வித்துட்டுச் சந்தைலேர்ந்து வர்றேங்க. ஒரு புடைவை எடுக்கலாம்னு வந்தேன். ஒரு கைலியும் கூட எடுக்க முடிஞ்சுது'' என்று மகிழ்ந்து கூறிய விவசாயி பாபு, வழக்கமாகப் பேரணாம்பட்டில்தான் துணி எடுப்பாராம். பருகூர் பற்றிக் கேள்விப்பட்டு ஆவலுடன் வந்தது வீண் போகவில்லை என்றார்.

''மெட்ராஸ் சிட்டியில் கூட இவ்வளவு வெரைட்டீஸ் பார்க்க முடியாதுங்க'' என்று அடித்துப் பேசினார் திருமுருகன் என்ற வாடிக்கையாளர். ''எங்கள் வீட்டில் எந்த விசேஷத்துக்கும் இங்கேதான் துணியெடுப்போம். தொலைவிலிருந்து வந்தாலும் சிரமம் தெரியறதில்லை. கான்டீன், டாய்லெட் வசதிகளெல்லாம் இருக்கு...'' என்றார்.

**தி**ருச்சியில் தோல் தொழிற்சாலையில் பணிபுரிந்து வந்தவர் வில்லியம். வேலை இழந்த பிறகு அவருக்குப் பிழைக்க வழிகாட்டியது பருகூர்தானாம். ''திடீரென்று வேலை போனதும், முன்பு குடும்பத்தோடு வந்து ஜவுளி வாங்கிப் போன பருகூர் ஞாபகம் வந்தது. இங்கிருந்து துணிகளை வாங்கிப் போய் லாபத்துக்கு விற்கிறேன். கணிசமான வருமானம் கிடைக்குது'' என்றார் வில்லியம்.

பல பேரின் வண்ண ஜவுளிக் கனவுகளை நனவாக்கும் பருகூர் இப்படிச் சில பேரின் வாழ்க்கைக்கும் வழிகாட்டுவதை எண்ணி மகிழ்ச்சியுடன் வெளியேறினோம். இருள் கவியும் நேரத்தில் மின் விளக்குகளின் பிரகாசமான ஒளியில் பளபளத்தது பருகூர் டெக்ஸ்டைல் பாரடைஸ். ''ஏழு மணிக்கெல்லாம் கடைகளை மூடிடுவாங்க'' என்று சிலர் தகவல் கூறினார்கள். காரணம்: பின் மாலை நேரத்தில் பருகூர் வியாபாரிகள் உழைத்த களைப்புத் தீர, மின் ஒளியில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளைக் காணச் சென்று விடுவார்களாம். கடந்த ஐந்து வருடங்களாக இவ்வூரில் மாநில அளவிலான வாலிபால் போட்டிகள் நடந்து வருகின்றன. இவ்வாண்டு பெண்கள் வாலிபால் போட்டி நடைபெறுகிறது.

— திருவைக்குமார்

படங்கள் : சுபா




வாசகர் யோசனை:
சா. கிருஷ்ணசாமி,
ஸ்ரீமுஷ்ணம்.

''உனக்கும் உன் மாமியாருக்கும் தினமும் வாய்த் தகராறுன்னு சொல்றே... ஆனா வெளியே சத்தமே கேட்கலையே...!''

''சத்தமா சண்டை போட்டா பக்கத்து வீட்டுக் கமலாவோட மாமியாருக்குச் சில பாயின்ட்ஸ் கிடைச்சுடுமேன்னு என் மாமியாருக்குக் கவலை. அதான்...''

— மு. வேங்கடேசன்.



# சதாம் உசேனைச் சந்திக்கிறார்

அப்புசாமியின் வீட்டுச் சுவரில் கீழ்க் கண்ட பெயர்ப் பலகைகள் மாட்டப் பட்டிருந்தன.

'பன்னாட்டு அரசியல் புலவரேறு'

'வளைகுடா அரசியல் வல்லூறு'

'அனைத்துலக அரசியல் அரிமா'

'எண்ணெய் அரசியலின் ஏற்றமிகு ஆற்றலோன்'

'சர்வதேச அரசியல் சகுனி'

மேலும் பல பலகைகள் மாட்டுவதற்கான முயற்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

அறிவிப்பில் இருந்தவையெல்லாம் அப்பு சாமியின் அரசியல் ஞானத்துக்குச் சமீபத்தில் கிடைத்த பட்டங்கள்.

"என்னடா பீமா, இன்னும் எத்தனை போர்டு மாட்ட வேண்டும்?" என்று செய்திப் பத்திரிகையும் கையுமாக அப்பு சாமி வெளியே வந்தார்.

"இன்னும் மூணு மாட்டுபேகு. இரடு ஆணிதான் இத்தே. ஏனு மாடுது?" என்றான் பீமாராவ்.

சுவரில் சற்று ஒதுக்குப்புறமாக மாட்டி யிருந்த ஒரு பெயர்ப் பலகையின் மீது அப்பு சாமியின் கண்கள் ஸ்கட் ஏவுகணை மாதிரி பாய்ந்தன.

அந்தப் பலகையில் இருந்த வரிகள்:

மிஸஸ் சீதா அப்புசாமி.

தலைவி.

பாட்டிகள் முன்னேற்றக் கழகம்.

"இயலியைக் கழற்றிக் கடாசிட்டு அந்த ஆணியிலே நம்மதை மாட்டேண்டா," அப்பு சாமி உத்தரவிட்டார்.

நிறைவேற்றப்பட்டது.

பீமாராவ் கழற்றிக் கடாசிய பலகை பல இலக்குகளைத் தாக்கி அங்கங்கே கணிச மான சேதங்களை ஏற்படுத்தியவாறு, இறுதி யில் அன்றைய 'கல்ஃப் வார்' நிலைமை யைப் பத்திரிகையில் படித்துக் கொண் டிருந்த சீதாப்பாட்டியின் காலடியில் வந்து விழுந்தது.

இமார்ப் பதவி நீக்கங்களும் பெயர்ப் பலகைக் கடாசல்களும் நாட்டில் சகஜமான நிகழ்ச்சிகள்தான். ஆனால், வீட்டில்?

சீதாப்பாட்டி கணவரின் அராஜகச் செயலை, அத்துமீறலைப் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்துக் கொண் டாள்.

"இன்னாமே, முறைக்கிறே?" என்று அப்புசாமி உறுமினார். "ரசிகருங்க வர்ற நேரமாச்சு. போய் டீ போடு. சதா பேப்பரு படிச்சிட்டிருந்தா சதாம் உசைனா வந்து சாயா போடுவார்?"

பழைய கால சிற்றன்னைகளின் கொடுமைக்காரான ஞான சௌந்தரி, சாந்த சக்குபாய் இவர்களைப் போலச் சீதாப்பாட்டி வாய் பேசாது சமையலறைக் குப் போனாள் டீ தயாரிக்க.

ஆனால் பூவுக்குள் ஒரு பூகம்பம் உருவா கிக் கொண்டிருந்தது. பா.மு.கழகத் தேர்தல் நெருங்கிக் கொண்டிருந்ததால் சீதாப்பாட்டி பொறுமையாக இருந்தாள்.

கொஞ்ச நாள் முன்பு வரை ஸதாம் என்றால் யார், உசைன் கிலோ என்ன விலை என்றுதான் கேட்டுக் கொண்டிருந் தார் அப்புசாமி.

ஒரு தினம் கிராப் வெட்டிக் கொள்ளச் சலூனுக்குச் சென்றிருந்த போது, அவரது கிராப்பில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும் பெரிய திருப்புமுனை ஏற்பட்டது.

சலூன்கார சஞ்சீவி நாட்டு நடப்பு பற்றி அப்புசாமியிடம்தான் (மூன்று மாசத்துக்கு ஒரு தரம்) கேட்டு அறிவது வழக்கம். "இந்த ஈராக்கும் ஈரானும் இப்படி அடிச்சிக்கிறாங் களே, எப்போ சார் ஓய்வாங்க?" என்று முன்பு கேட்டான்.

அப்புசாமி அசுவாரசியமாக, "இரண்டி லேயும் 'ஈ' இருக்குது. சமாதானமாயிடு வாங்க," என்று சொல்லி வைத்தார்.

அதே போல் சிறிது நாளில் நடந்து விட்டது.

சலூன் சஞ்சீவிக்கு அவர் மீது அபார மதிப்பு ஏற்பட்டது.

அடுத்த தடவை அவர் வந்த போது, "குவ்வாத்தை ஈராக் பிடிச்சுக்கிட்டானாமே. இன்னா சார் ஆவும்?" என்றான்.

"வாத்தை பிரியாணி போட்டுடுவான்," என்றார் அப்புசாமி.

"அதில்லே சார், பாமாயில் இனிமேல் கிடைக்குமுங்களா?" என்றான்.

அப்புசாமி, "இனிமேல் பாம் (குண்டு) ஆயில்தான். பாரேன். எவனாவது வல்லரசு நடுவுலே பூந்துடுவான்," என்றார்.

அதே மாதிரி நடந்து விட்டது.

அடுத்த தடவை அப்புசாமி ஷேவிங் செய்து கொள்ள வந்த போது சஞ்சீவி, "கொஞ்சம் இரு சார்," என்று சொல்லி விட்டு வெளியில் போய் ஒரு சின்ன சைஸ் மாலை வாங்கி அவர் கழுத்தில் போட்டான். நீ சாதாரண ஆளே இல்லை. அரசியல்லே படா கில்லாடி சார்," என்றான்.

பாக்கியம் ராமசாமி



# அப்புசாமி

அவன் சொன்ன சமயம் அப்புசாமியுடன் ரசகுண்டுவும் உடன் இருந்தான்.

''எங்க தாத்தா சாமான்னிய அரசியல் வாதி இல்லப்பா.

பன்னாட்டு அரசியல் புலவரேறு
வளைகுடா அரசியல் வல்லூறு
எண்ணெய் அரசியலின் ஏற்றமிகு ஆற்றலோன்
சர்வதேச அரசியல் சகுனி
அனைத்துலக அரசியல் அரிமா

பார்க்கப் போனால் இப்படிப்பட்ட அரசியல் மேதை உன்னிடம் தலையைக் கொடுக்க வர்றாருன்னா, நீ அவர் தலையைச் சும்மாவே வெட்டித் தள்ளணும். அவரோட சிஷ்யப் புள்ளையான எனக்குக் கூட சும்மாவே ஷேவ் பண்ணணும்,'' என்றான்.

''அப்படியே செஞ்சுடறேங்க. என்று அப்புசாமிக்கும் ரசகுண்டுவுக்கும் அன்று இலவசமாகவே வேலை செய்து அனுப்பினான் சஞ்சீவி.

திரும்பும் போது அப்புசாமிக்கு ரசகுண்டு அளித்த பட்டங்களையெல்லாம் ஏன் தன் வீட்டு வாசலில் எழுதி மாட்டிக் கொள்ளக் கூடாது என்று தோன்றியது. இந்தக் காலத்தில் அவரைப் போன்றவர்களுக்குப் பட்டங்கள் சாமான்னியமாகக் கிடைக்கிற காரியமா? அப்படியே கிடைத்தாலும், சடசட வென்று புளியம்பழம் உதிர்த்தாற்போல் இத்தனை கிடைக்குமா? வேறு எவனாவது வந்து இதுகளைப் பொறுக்கிக் கொள்வதற்குள் தானே அனுபவித்து விட வேண்டும் என்று எண்ணினார்.

பட்டங்கள் மாட்டப்பட்டன. வீட்டு வாசவிலேயே சங்க(ட)த்தையும் அப்புசாமி நிறுவி விட்டார்.

சலூன் சஞ்சீவி, அவனுடைய அண்டு ஸன்னுக்கு உரிய மகன் சிரஞ்சீவி, ரசகுண்டு, பீமாராவ் இவர்களுடன், சாலையில் போகிற வருகிற சில கேஸ்களும் சங்கப் பலகையில் வந்து உட்கார்ந்தன.

கூட்டம் சேர்ப்பதற்காக 'இலவச மூ வழங்கப்படும்' என்ற அறிவிப்பை மாட்டப் போய்த் தினமும் முப்பது நாற்பது பேர் அப்புசாமியின் அரசியல் ஊகங்களையும் (முக்கியமாக மூயையும்) பருகக் குழுமத் தொடங்கினர்.

சீதாப்பாட்டிக்குப் பல சங்கடங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. ரசிகர்கள் போடும் அவித்த வேர்க்கடலைத் தோல்கள், பீடி, சிகரெட் துண்டுகள், சங்க நடவடிக்கை ஆரம்பித்து விட்டது என்பதற்காக ணங் ணங் ணங் என்று நாராசமாக அடிக்கும் தண்டவாள மணி சத்தம் —

இவைகளையாவது பொறுத்துக்



''நான் இண்டுக்கல் கேட்டிருந்தேன். அவங்க பழநி தர்றேங்கிறாங்க.''

''எந்தக் கட்சியிலே நிக்கப் போறீங்க?''

''நீங்க ஒண்ணு! தேர்தல் இல்லீங்க. ஆபீஸ்லே டிரான்ஸ்ஃபர்!''

---

கொள்ள முடிந்தது. அப்புசாமியின் அபத்தமான அரசியல் உளறல்களைச் சகிக்கவே முடியவில்லை.

கூட்டம் தொடங்கி விட்டது.

அப்புசாமி நாற்காலியில் அமர்ந்தார்.

''ஏண்டா ரசம் மெத்து மெத்தென்று ரெண்டு இண்டு வாங்கிப் போடக் கூடாது?'' என்றார் ரசகுண்டுவிடம்.

அவன், ''குண்டு விழுறதைப் பற்றிப் பேச உங்களுக்குத் இண்டு கேட்குதோ. சும்மாருங்க தாத்தா,'' என்று அடக்கி விட்டான்.

ஒரு பெரிய கரும்பலகை நிறுத்தப்பட்டிருந்தது.

அப்புசாமி ஒரு சாக்பீஸை எடுத்துக் கொண்டார். மனசில் புலவர் நன்னன் என்று நினைப்பு.

''வளைகுடா அரசியல் அன்பர்களே, யுத்தத்திலே அடுத்தாற்போலக் குதிக்கப் போகிற நாட்டின் பெயரை எழுதியிருக்கேன். நீங்க படிக்கிறீங்களா, நான் படிக்கட்டுமா? நானே படிச்சுடறேன்... இ... இஸ்... ரேய்ய்... இஸ்.. இஸ்ரேல். எங்கே... இப்ப ஒவ்வொருத்தராப் படிக்கணும்.''

''டீ குடிச்சிட்டுப் படிக்கலாமுங்களா?'' என்றான் சலூன் சஞ்சீவி மகன் சிரஞ்சீவி.

''ஏலக்காய் டீயாமுங்களே,'' என்றான்.

''ஆமாம். ஆமாம். டீயி! டீயி!'' என்று மற்றவர்களும் ஆதரவுக் குரல் எழுப்பினர்.

அப்புசாமி கோபத்துடன், ''இன்னும் அந்தக் கிழவி டீ போடலை? டேய் பீமா, உள்ளே போய்ப் போட்டவரைக்கும் போதும்னு வாங்கிட்டு வாடா'' என்று விரட்டினார்.

அதே சமயம் வாசலில் அவசர அவசரமாக ஒரு மோட்டார் சைக்கிள் வந்து நின்றது.

அதிலிருந்து இறங்கிய ஒரு வாலிபன் ''யார் சார் மிஸ்டர் அப்புசாமி? பன்னி நாட்டு அரசயல் புலாவ் ரூறு!'' என்றான்.

''யோவ். பட்டத்தைக் கொலை பண்ணாதீய்யா. பன்னாட்டு அரசியல் புலவரேறு. எங்க தலைவர்தான். தந்தியா?''

''பேக்ஸ் மெஸேஜ்,'' என்று ஒரு நீளக் காகித உறையைக் கொடுத்து விட்டு நகர்ந்தான்.

அப்புசாமி பிரித்தார்.

''என்னடாது.. தந்தியா... அவன் வேறு என்னவோ பேரு சொல்லிட்டுப் போறான்?'' என்றவாறு படிக்க முயன்றார்.

சீதாப்பாட்டி அதே சமயம் ஒரு டிரேயில் டீ கப்புகளை அடுக்கி எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

''அடியே கிழவி!'' என்று அதட்டினார் அப்புசாமி. ''என்னவோ வந்திருக்குது பார். உங்க வகையறாவிலே யாராவது மண்டையைக் கிண்டையைப் போட்டுட்டாங்களா?''

சீதாப்பாட்டி கடிதத்தைப் படித்துப் பார்த்தாள்.

''வாட் எ சர்ப்ரைஸ்! ஐ காண்ட் பிலீவ் மை ஐஸ்... கன்கிராஜுலேஷன்ஸ்'' என்று அப்புசாமியின் கையைப் பற்றிக் குலுக்கினாள்.

''என்ன இழவுடி வந்திருக்கிறது?''

சீதாப்பாட்டி உள்ளே அப்புசாமியைக் கூட்டிச் சென்றவள், கதவைத் தாளிட்டாள். ''உங்க மதிப்பு எனக்கு இப்பத்தான் புரியறது... ஹிஸ் எக்ஸலன்ஸி த பிரசிடெண்ட் அஃப் ஈராக். மிஸ்டர் ஸதாம் ஹுஸைன் உங்களுக்கு அவசரச் செய்தி ரகசியமா அனுப்பியிருக்கிறார்.''

''ஹுஸைனா? எனக்கா? என்னடி உளர்றே?''

''ஆமாம்.'' சீதாப்பாட்டியின் முகம் ஐந்து ரூபா காலிஃப்ளவர் மாதிரி அகலமாக மலர்ந்தது.

''மெஸேஜைப் படிக்கிறேன் கேளுங்க.''

''ஸலாம் அலைகும், அஸ் ஸலைகும் ஸலாம். ஐ யம் அட்ரஸிங் மிஸ்டர் அப்புசாமி. த கல்ஃப் வார் விசார்ட் — த கிரேட் பொலிடிகல் அட்வைசர் — மெஸேஜ் ஆஸ் ஃபாலோஸ். ஹிஸ் எக்ஸலன்ஸி த பிரசிடெண்ட் மிஸ்டர் ஸதாம் ஹுஸைன் வில் பி மீட்டிங் யூ இன் பர்ஸன் அட் ட்வெல்வ் திஸ் நைட். வென்யூ: மாங்கோ க்ரோவ், ஈச்சாங்குட்டை — நியர் சோளாவரம் ஹெலிபாட் — கம் வித் அ வெய்லபிள் டேப் ரிகார்டர், வி. ஸி. ஆர்., அண்ட் எனி நம்பர் ஆஃப வோடட் காமெராஸ். திஸ் இஸ் எ ஸீக்ரட் மிஷன் — ரெஃப்ரெய்ன் ஃப்ரம் டிஸ்க்ளோஸிங் — ஈவன் டு யுவர் பிலவட் ஒய்ஃப் மிஸஸ் சீதே.

— பர்சனல் செகரட்டரி டு ஹிஸ் எக்ஸலன்ஸி த பிரசிடெண்ட்.

இரவு மணி பத்து.

''மை வொண்டர் பாய்!'' சீதாப்பாட்டி அப்புசாமிக்கு டை கட்டி அலங்கரித்துக் கொண்டிருந்தாள்.

ஆனால் அவர் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. ''ஏண்டி சீதே.. அந்த ஆளு துப்பாக்கி கிப்பாக்கி வெச்சிகிட்டிருப்பானே. ஊர் உலகத்திலே அரசியல்வாதிங்க எத்தனை பேர் இருக்கறாங்க. கருணாநிதி,

ஜெயலலிதா, மூப்பனார், வாழப்பாடி, இவுங்களைக் கூப்பிட்டு அந்த ஆள் சந்திக்கக் கூடாதா? நான்தானா அகப்பட்டேன்?''

சீதாப்பாட்டி அப்புசாமியின் கிராப்பை வாரிக் கொண்டே, ''உங்கள் புகழ் அவ்வளவு தூரத்துக்கு ரீச் ஆகியிருக்கிறது. எதிர்காலத்தை ப்ரடிக்ட் செய்யறதில் நீங்க ஒரு நாஸ்டர்டாமஸ் என்று ஹிஸ் எக்ஸலன்ஸிக்குத் தோன்றியிருக்க வேண்டும். உங்களுக்கு இது ஒரு கோல்டன் ஆபர்சூனிடி. கோர்பச்சேவுக்கு நோபல் ப்ரைஸ் ஃபர் சமாதான்'த்துக்குக் கிடைச்ச மாதிரி உங்களுக்கும் கூடக் கிடைக்கலாம். பெஸ்ட் ஆஃப் லக். நீங்க சொல்கிற யோசனையைக் கேட்டு ஒரு ஆயில் வெல்லையே கூட உங்களுக்கு மிஸ்டர் ஸதாம் எழுதி வைத்து விடலாம்! ஓவர் நைட்டில் நீங்க கோடீஸ்வரர் ஆகி விடலாம்.''

''காமெரா, டேப்ரிகார்டர், வி.ஸி.ஆர். இதுக்கெல்லாம் எங்கேடி போவேன்.''

''மை டியர், டோன்ட் வொர்ரி, ஐ ஷல் கிவ் ஆல் ஆஃப் மை காமெராஸ், டேப்ரிகார்டர்ஸ் அண்ட் எவ்ரிதிங்... உங்களுக்குக் கிடைக்கிற புகழ் ஃபார்ச்சூன்ஸ் எல்லாம் எனக்கும் இல்லையா? ப்ளீஸ், என்னைப் பழைய சீதேயாக நினைக்காதீர்கள்.''

நெற்றியில் குங்குமத் திலகம் இட்டு அவருடைய காலில் விழுந்து சீதாப்பாட்டி வணங்கிய போது தரையில் சொட்டிய ஒரு சொட்டுக் கண்ணீர் சீதாப்பாட்டியுடையதா, அப்புசாமியுடையதா என்று சட்டென்று நிர்ணயித்துச் சொல்ல முடியாது.

நானே ஈச்சாங்குட்டை வரை டிரைவ் பண்ணிக்கொண்டு வரேன். காரை மறைவா நிறுத்திக் கொள்கிறேன். நீங்க போய் ஹிஸ் எக்ஸலன்ஸியை மீட் பண்ணி உங்கடயலாக் முடிந்ததும் காருக்குத் திரும்பி வந்துடுங்க.''

இரவு மணி பதினொன்று.

சீதாப்பாட்டி காரை ஸ்டார்ட் செய்தாள். அருகில் அப்புசாமி. ஈச்சாங்குட்டையை நோக்கி கார் புறப்பட்டது.

சாதாரணமாக மனித இருதயம் 'லப்டப்' என்று அடித்துக் கொள்ளும். அப்புசாமியின் இதயம் 'லபோ லபோ டபோ டபோ' என்று அடித்துக் கொண்டது.

நாற்பது நிமிஷங்களுக்குப் பிறகு... சீதாப்பாட்டி பிரேக்கை அழுத்தினார். ''வி ஹாவ் கம் டு அவர் டெஸ்டினேஷன். அதோ பாருங்க! அந்த ஈச்சமரத்திலே பளிச்சுனு ஈச்சாங்குட்டைன்னு எழுதியிருக்கு.

காரின் ஹெட் லைட் வெளிச்சத்தை சீதாப்பாட்டி அணைத்தாள். ''அதோ.. ஹிஸ் எக்ஸலன்ஸி குறிப்பிட்ட மாங்கோக்ரோவ். நான் காரை இங்கே புதர் மறைவில் நிறுத்திக் கொள்கிறேன். உங்களுடன் நான் அகாம்பனி பண்ணினதாக மிஸ்டர் ஸதாமிடம் சொல்லி விடாதீர்கள்.''

''சீதே...'' என்றார் அப்புசாமி நாதழுதழுக்க. ''வந்து வந்து எல்லாமே மறந்து போச்சுடி. இப்ப சண்டை எந்த நாட்டுக்கும் எந்த நாட்டுக்கும்?'' என்றார்.

''ப்ளீஸ்... ரிலாக்ஸ்... ரிலாக்ஸ்'' என்றாள் சீதாப்பாட்டி ஆறுதலாக.

''இப்படிக் கீழே உட்காருங்க. டீப்பா மூச்சு இழுங்க. இப்போ மெதுவா மூச்சை வெளியே விடுங்க. சான்ட் ஓம் ஓம் டென் டைம்ஸ்.. அகய்ன்.. ஸ்லோலி...

''என்னடி இழவு நட்ட நடுக் காட்டிலே நடுராத்திரியிலே தியான வகுப்பு எடுக்கிறே?''

தூரத்தில் பிறை போன்ற ஒரு வட்ட வெளிச்சம் அவர்களை நோக்கி சமிக்ஞை காட்டுவது போல இப்படியும் அப்படியும் ஆடியது.

சீதாப்பாட்டி பரபரத்தாள். ''இட் ஸீம்ஸ் ஹிஸ் எக்ஸலன்ஸி ஹாஸ் அரைவ்ட்.. டார்ச் ஸிக்னல் அடிக்கிறது உங்களுக்குத்தான். ஆல் த பெஸ்ட்... நல்ல அட்வைஸாகச் சொல்லுங்கள்...''

அப்புசாமி பிறைவடிவான ஒளி வட்டத்தை நோக்கி நகர, ஒளி வட்டம் அவரை நோக்கி அவர் கண்களில் கூசுவது போல் அடித்தது. எதிரே –

ஹிஸ் எக்ஸலன்ஸி ஸதாம் ஹுஸைன்!

அப்புசாமி ஸதாம் ஹுஸைனுக்கு என்ன யோசனை சொன்னார்? ஈச்சாங்குட்டையில் நடந்த இன்ட்டர்நேஷனல் விவகாரம் என்ன?

(அடுத்த வாரம்)

கல்கி இதழில் வரும் முக்கியமான கருத்துக்களைக் கரும்பலகையில் எழுதிப் பொதுமக்கள் பார்வைக்கு வைத்து வருகிறேன். புகைப்படத்தில் 17.2.91 கல்கி இதழில் 'கேள்வி — பதில்' பகுதியில் வெளிவந்த ஒரு கருத்தைக் கரும்பலகையில் எழுதி வைத்திருப்பதைக் காணலாம். ('தி. மு. க. ஆட்சியைக் கலைத்ததன் மூலம் யார் முகத்தில் கரிப்பூசப்பட்டது' என்ற கேள்வி... அதற்குரிய பதில். )

— ச. க. அரங்கராசன்,
மணச்சநல்லூர்.



# நடிகன்

அவன் நல்ல சிவப்பு; ஒற்றை நாடித் தேகத்தில் மொழு மொழுவென்று உரித்த வாழைத்தண்டு மாதிரி பளபளப்பாக இருந்தான். மார்பு அகன்று, புஜங்கள் திரண்டு, ஆஜானுபாகு வான தோற்றம். களையான முகமும், புஸ- புஸ-வென்று அலைபாய்கின்ற கிராப்புமாய் இருந்தான். சோற்றுக்கு அலைந்தாலும் உடுத்துகின்ற அழகு இருக்கே. அது அவ்வளவு லாகவம்!

கண்களில் ஈரமிருந்து, ஒளி ஊடுருவு கின்ற மாதிரி துருதுருவென்று பார்த்துக் கொண்டிருந்தான். இடமோவலமோ அசை யாது கைகட்டிப் பவ்யம் காட்டி நின் றான்.

''ஐயா வர ரொம்ப லேட்டா வும்.''

''பார்த்துட்டே போயிடறேன்.''

''டிஸ்கஷன் முடிஞ்சு, குளிச்சுட்டு, பூஜை முடிச்சுச் சாப்பிட்டுட்டுத்தான் வருவார். அதுவரைக்கும் இப்படியேவா நிப்பே?''

''இருக்கேன் சார்.''

கூர்க்கா பின்னடைந்தான். எத்தனை மாத கால அலைக்கழிப்புக்கும் விரட்டலுக் கும், அவமானத்துக்கும் பிறகு இன்று வாச லுக்குள் நுழைந்திருக்கிறான். 'ஷூட்டிங் கில் இருக்கார்,' 'தூங்கிக் கொண்டிருக்கார்' என்றுவீதியிலேவிரட்டிவிடுவார்கள். இன்று எத்தனை பேர் காலில் விழுந்து கோடு தாண்டியாயிற்று.

''என்ன தம்பி?''

பளீரென்று வெள்ளை உடையில் படி யிறங்கி வந்தார் டைரக்டர் பால்ராஜ். பேசிக் கொண்டே போர்டிகோ தாண்டி, கார் கத வில் கை வைத்தார். அவன் குனிந்து கை கூப்பினான்.

''ஆர்ட்டிஸ்ட் சார், தவமணின்னு பேர். சின்னச் சின்ன ரோல் பண்ணியிருக்கேன். உங்க படத்துல ஒரு வாய்ப்புத் தரணும் சார். நல்லாப் பண்ணுவேன்.''

''இப்ப ஒண்ணுமில்லையேப்பா!''

''சார், பிரமாதமாப் பண்ணுவேன்!''

''அட்ரஸ் புக்ல எழுதி வைச்சுட்டுப் போ, பார்க்கலாம்!''

''ஒண்ணே ஒண்ணு பண்ணிக் காட்டட் டுமா சார்!''

''அவசரமாக் கிளம்பறேன்,'' சொல்லி விட்டு, காரில் ஏறிவிட்டார்.

காரின் கறுப்பு நிறக் கண்ணாடி மெல்லக் கீழ் இறங்க அவன் இன்னும் அப்படியே நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

''ப்ளீஸ் சார் ஒண்ணு மட்டும் பண் றேன்.''

''பிற்பாடு பார்க்கலாம்.''

தவமணி சட்டென்று சட்டை பட்டன்



களைக் கழற்றி, சட்டையை எறிந்து விட்டு, காலை மடித்துத் தரையில் ஊன்றி வலது கை உயர்த்தி, ஒரு வசனம் பேசினான். அப்படியே காலை இழுத்துக் கொண்டே போர்ட்டிகோவை அரைவட்டம் அடித்துக் கொண்டு, முகம் சிவக்க வசனத்தைத் தொடர்ந்தான். முழங்கால், தொடை எல்லாம் சிராய்ப்பு ஏற்பட்டு ரத்தம் கசிந்தது. சட்டென்று உதறி எழ, வலதுகை தூணில் பலமாய் அடிபட்டு ரத்தம் கொட்டிற்று. விடாது உற்சாகமாய்ச் சுழன்று சுழன்று வசனத்துக்கு ஏற்ப முகத்தைச் சட்சட்டென்று மாற்றிக் காட்டினான்.

— இது தெலுங்குப் படம் ஒன்றில் பிரபல நடிகர் ஒருவர் நடித்த காட்சி. இப்படி வெற்றுத் தரையில் செய்யவில்லை. வெல்வெட் விரிப்பில் முழங்காலில் ஸ்பாஞ்ச் கட்டிக் கொண்டு செய்தது! இவன் செய்த போது எல்லோரும் அப்படியே உறைந்து போனார்கள். கூர்க்கா வாய் பிளந்து பார்த்தான். கிரில் கேட்டுக்கு வெளியே ஜனங்கள் மெல்லத் தலையைத் தூக்கிப் பார்த்தார்கள். டைரக்டர் பால்ராஜ் பேசாது கண் மூடி, பின்னால் சரிந்து கொண்டார்.

''எப்படி சார் இருந்தது?''

''......''

''ப்ளீஸ், சொல்லுங்க சார்! நல்லா இருந்ததா?''

''......''

''இதைவிட நல்லாப் பண்ணுவேன் சார். ஒரே ஒரு தடவை மட்டும் வாய்ப்புக் கொடுத்துப் பாருங்க சார்.''

''.....''

''சாருக்குப் பிடிக்கலையோ! ஏதுனாச் சொல்லுங்க சார்! இரண்டு நாளாச் சாப்பிடலை சார். இல்லைன்னா இன்னும் பிரமாதமாப் பண்ணியிருப்பேன்.''

டைரக்டர் விருட்டென்று காரைக் கிளப்பி போர்டிகோ கடந்து தெருவில் நுழைந்து கரைந்து போனார்.

மேன்ஷன் அறையில் தவமணி குளித்து உடை மாற்றிக் கொண்டிருந்த போது ஆள்காட்டி விரல் மடக்கி நாகரிகமாகக் கதவு தட்டப்படுகிற ஓசை கேட்டது. டைரக்டர் பால்ராஜ் அழைத்து வரச் சொன்னார் என்று ஒருவன் வந்து நின்றான். தவமணிக்குச் சட்டென்று உடல் பஞ்சு மாதிரி ஆகி மிதப்பது போல் பட்டது. உடம்புக்குள் சிலீரென்று குளிர்கின்ற மாதிரி இருந்தது. கண்களில் நீர் திரண்டது.

''நிஜமாகவா சார்!''

''ஆமாம் வாங்க. வெளியில் கார் நிக்குது. இப்படியே கிளம்பலாமா? டைரக்டர் ஏ. ஆர். எஸ். கார்டன்ல இருக்கார்.''

கார் கிளம்பியது.

''சார் நீங்க...?''

''சுரேஷ். சார்கிட்ட அஸிஸ்டெண்டா இருக்கேன்.''

''கைகொடுங்க சார்! எப்படியும் பெரிய ஆளா வந்திடுவீங்க! எங்களை மாதிரி ஆர்ட்டிஸ்ட்டுகளை மறந்துடாதீங்க!''

அவன் இலேசாகச் சிரித்தான்.

''சார்ட்ட ஏதுனா சான்ஸ் கிடைக்குமா?''

''முடிவு பண்ணிட்டார் தவமணி. சாரோட அடுத்த படம் 'புதுப் புதுக் கனவுகள்'ல நீங்கதான் ஹீரோ. இந்த விஷயம் தெரிஞ்ச மாதிரிக் காட்டிக்க வேண்டாம். அவரே சொல்லுவார்.''

தவமணி அவன் முழங்காலை அழுத்திப்



30 ஆண்டுகளில் 3300 திருத்தங்கள்!

> கடந்த 30 ஆண்டுகளில் வருமான வரிச் சட்டத்தில் 3300 திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்தியாவில் வேறெந்தச் சட்டத்துக்கும் இல்லாத பெருமை இது!
>
> ஆதாரம்: நேர்முக வரிகள் நூல் விமர்சனம்
>
> தகவல்: அ. ஷண்முகசுந்தரம்.

பிடித்துக் கொண்டு, 'நிஜமாவா சார்? நிஜ மாவா?' என்று பதறினான். அவன் நீட்டி யிருந்த காலை மடக்கி, தவமணியின் கைகளை விலக்கி, அவன் தோளில் கை வைத்துக் கொண்டு, ''பின்னே பொய்யா? நிஜம்தான்!'' என்றான்.

''இப்பத்தான் எனக்கு விடிஞ்சிருக்கு! எத்தனை தூரம் லோல்பட்டிருப்பேன் தெரியுமா சார்?''

''பின்னே, சினிமான்னா லேசா?''

இலேசு இல்லைதான். நீண்டு விரிந்து கிடக்கிற அகழிக்கு நடுவில் இருக்கிற கோட்டைதான். ஆனால் யாரும் இத்தனை ஹிம்சைப்பட்டிருப்பார்களா?''

தஞ்சாவூர் பூமியை விற்றுவிட்டு மெட்ராஸ் வந்து, ஒரு வருஷம் சரோஜாவிடம் டான்ஸ் கிளாஸ். டான்ஸ் மூவ் மெண்ட்டில் துளி பிசகக் கூடாது. சுப்பராயனிடம் எட்டு மாதம் சண்டைப் பயிற்சி — மாடியிலிருந்து குதிக்க வேண்டும்; பலம் கொண்டு வில்லனைத் தாக்கித் தலை கீழாய்க் கவிழ்க்க வேண்டும்; எல்லாமே டூப் இல்லாது தானே செய்ய வேண்டும். ஃபிலிம் சொஸைட்டியில் மெம்பராகி வெளிதேசத்துப் படங்கள் நிறையப் பார்த்துத் தெளிவாய்ப் படித்தாயிற்று. சகலமும் கற்றுத் தெளிந்து, பீல்டில் கால் வைக்க, எக்கச்சக்கமாக முள்! கால் வைக்க முடியாது தைத்தது! ஆயிரம் அனுபவித்து மேக்கப் டெஸ்ட் வரை போயாயிற்று; பயனில்லை.

''நீதான் கண்ணா நம்ம படத்தோட ஹீரோ!''

''ஷூட்டிங் எப்போ சார்?''

''பைனான்ஸ் கொஞ்சம் ரெடியாவணும். எப்படியும் ரெண்டு மாசத்துல பூஜை போட்டுடலாம்.''

அதுவரை அந்தப் புரட்யூஸருக்குப் பின்னால் ஆட்டுக்குட்டியாய்த் தலையைக் குலுக்கிக் கொண்டு திரிய வேண்டும். மூன்று அறைகள் கொண்ட படக் கம்பெனி. பின் அறையில் சமையல் நடக்கும். புரடக்ஷன் ஆட்கள், கதை டிஸ்கஷன் செய்கிற கூட்டம். எல்லாருக்கும் பொங்கிப் போட வேண்டும். காய்கறிகள் நறுக்கி எச்சில் பாத்திரம் அலம்பி...

''தவமணி!'' புரடியூசர் குரல்.

''சார்?''

''கையிலே எதுனா வேலை வெச்சிருக்கீங்களா?''

''சொல்லுங்க சார்!''

''கார்த்தால ராஜா சாரைப் பார்க்கப் போகணும். மியூஸிக் கம்போஸிங் டேட்ஸ் தர்றேன்னுட்டார். நீங்க ஒண்ணு பண்ணுங்க. என்னோட டிரஸ் எல்லாம் பக்கெட்ல ஊறப் போட்டிருக்கேன். கொஞ்சம்... ஸாரி, தப்பா நினைச்சுக்காதீங்க... தம்பி!''

பாத்ரூமில் பக்கெட்டிலிருந்து வேஷ்டி, பேண்ட், ஷர்ட், ஜட்டி என்று ஒவ்வொன்றாய் உருவிச் சோப்புப் போடும் போது அப்படியே ரத்தம் சூடேறிக் கொதித்து நுரை எழும்பும். எத்தனை முறை இப்படிப் பாத்ரூமில் அழுது தீர்த்திருக்கிறான்! படத்தின் வேலைகள் நகர்கின்றன என்ற சந்தோஷத்தில்தான் இதையெல்லாம் தாங்க முடிந்தது.

ஆனால் படம் பூஜையோடு சரி. இப்படி எத்தனை பட்டிருப்பான்! எல்லாமே இப்போது கரைந்து போயிற்று.

''வணக்கம் சார்.''

டைரக்டர் பால்ராஜ் தவமணியின் கை பிடித்துக் குலுக்கினார். சுற்றியிருந்தவர்கள் வியந்து வியந்து பார்த்தார்கள்.

''நீதான் நம்ம பட ஹீரோ!''

அவர் தோளில் தட்டினார். தவமணி சட்டென்று இரண்டடி பின்னுக்கு நகர்ந்து உடல் முழுவதும் நிலத்தில் பட விழுந்து, கைகுவித்து வணங்கினான்.

''எழுந்திரு தம்பி. இதெல்லாம் எதுக்கு?''

''தெய்வம் சார் நீங்க...''

''இந்தாப்பா...'' என்று ஒரு ப்ரௌன் கவரை நீட்ட, விழி அகலப் பார்த்தான். 'அட்வான்ஸ் ஆயிரத்து ஒண்ணு இருக்கு. என்னோட எல்லாப் பட ஹீரோவுக்கும் இந்த கார்டன்லதான் முதல் அட்வான்ஸ் கொடுக்கிற வழக்கம்.''

''ஆமாம் சார்! கமல் சார் கூட ஒரு பேட்டியிலே சொல்லியிருக்கார்!''

''இப்ப கொஞ்சம் ஆக்ஷன் ஸ்டில்ஸ் எடுப்பாங்க. முடிஞ்சதும் போயிட்டு அடுத்த புதன் கிழமை சிவாலயா பிலிம்ஸ் ஆபீசுக்கு வா. பத்தரைக்கு மேல கிளம்பி வந்தாப் போதும். புரடியூசர், காமிரா மேன், ராவ், எல்லாம் வருவாங்க. அறிமுகப்படுத்தறேன். அப்புறம், உன் பேர் என்ன சொன்னே?''

''தவமணி சார்.''

''மாத்திடணும். நியூமராலஜி பார்த்து மாற்றி வெச்சிடலாம். வெளியிலே ஒண்ணும் இதுபற்றிப் பேச வேண்டாம்.''

அவன் மீண்டும் கைகூப்பி, பவ்யமாக நகர்ந்து கொண்டான்.

டைரக்டர் பால்ராஜ் மோவாயில் கை யூன்றி, குஷன் நாற்காலியில் அமர்ந்திருந்தார். எதிரே ப்ளோ-அப் செய்யப்பட்ட தவமணியின் படங்கள். பல ஆக்ஷ

வில் கலர் கலராய்ப் படங்கள். வலது பக்கம் அவரின் அஸோஸியேட் ராவ் இருபது வருஷங்களாய்ப் பால்ராஜ் கூடவே இருப்பவர். சிவாலயா பிலிம்ஸின் தூண் என்று பேசப்படுகின்றவர். திருநீற்றுக் கீற்று ஜொலிக்கக் கதரில் நின்றிருந்தார்.

''பையன் எப்படி ராவ்?''

''ஜோர்தான். ஆனால் ரிஸ்க் பார்ட்டி ஆச்சே!''

''என்ன?''

''இவன் கால் வைக்கிற இடமெல்லாம் வழுக்கிடுது. ஜி. ஆர். பிலிம்ஸ்ல இவனைப் புக் பண்ணி, படம் பூஜையோட சரி. நம்ம பைனான்சியர் சந்தானம் ஒரு படத்துக்கு ரெகமெண்ட் பண்ணியிருக்கான். ஒரு சின்ன ரோல்தான் கொடுத்தாங்க. படம் முடிஞ்சும் டப்பாக்குள்ளே கிடக்கு... இதே மாதிரிதான் ஆர். வி. பிலிம்ஸ்லயும். நாமளும் அந்த ரிஸ்க் எடுத்துக்கணுமா?''

''ஆள் நல்லா இருக்கான் ராவ். பெர்பாமென்ஸ் எல்லாம் தூள் பண்றான். நம்ம படம் வந்திடுச்சன்னா எங்கேயோ போயிடுவான். நல்ல டேலண்ட் இருக்கு.''

''இல்லைங்கல சார். நானும் கேள்விப் பட்டிருக்கேன். பாம்புன்னு வெறும் வாயிலே சொன்னாப் போதும். அந்த நேரமே எதிரே வளைஞ்சு நெளிஞ்சு படம் எடுத்துக் காட்டிடுவான். நல்ல நடிகன்தான். ராசி இல்லாத போயிட்டானே சார்!''

''வேண்டாம்ங்கிறியா?''

''உங்க டைரக்ஷனுக்கு ஃபீல்டுல தனி வால்யூ உண்டு. அதுபோதும் நமக்கு. சிவாலயாவுல தொடர்ந்து ரெண்டு படம் அவுட்! இந்த நேரத்துல ரிஸ்க் எடுத்துக்கணுமான்னுதான் கேள்வி. யோசியுங்க...''

டைரக்டர் கால்களைத் தளர்த்திக் கைகளை உயர்த்திச் சோம்பல் முறித்தார். முகத்திற்கு எதிரே பாம்பாய்ச் சுழன்ற தவமணியின் உருவம் வந்து மோதியது. நிச்சயம் அவன் மாபெரும் நடிகன்தான். கணப் பொழுதில் முகத்தில் சகல பாவங்களையும் காட்டிவிடுகின்ற அற்புத நடிகன்.

''முடிவு பண்ணுங்க. நான் வாஹினி வரை போய் வந்திடுறேன். டைட்டில் டிஸைன் ரெடி. நீங்க சொன்னபடி 'க்' எடுத்துட்டு ஒன்பது எழுத்து வர்ற மாதிரி பண்ணிட்டேன். பதினெட்டாம் தேதியே பூஜை வெச்சுக்கலாம். கூட்டினால் ஒன்பது வருது. வழக்கம் போல ஃபர்ஸ்ட் ஷாட் வாஹினியிலே வச்சுக்கலாம். ஏதோ தெலுங்கு பட செட்டுப் போட்டிருக்குன்னான். எப்படியாவது தூக்கிடுப்பான்னுட்டு வந்தேன். நேர்ல போய் அழுத்தினாத்தான் உண்டு. கிளம்பட்டுமா சார்...?''

''நல்லது ராவ். அப்படியே சுரேஷை மாம்பலத்துக்கு அனுப்பி அந்தப் பையன் தவமணிகிட்டத் தகவல் சொல்லிடச் சொல்லுங்க. அவன் ஹீரோ இல்லை. எடுத்தாச்சு. அடுத்த படத்துலே பார்த்துக்கலாம்ங்கிற மாதிரி சொல்லிடச் சொல்லுங்க. சரிதானே?''

# சிவகாமியின் சபதம்

## பூர்வ கதை

காஞ்சிமா நகரைத் தலைநகராகக் கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தை ஆண்டு வந்த மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் குமாரர் மாமல்ல நரசிம்மருக்கும், அரண்ய மத்தியில் வீடு கட்டிக் கொண்டு வாழ்ந்த ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமிக்கும் காதல் ஏற்பட்டு வளர்ந்து வருகிறது.

பல்லவ சாம்ராஜ்யத்தின் மீது படையெடுத்து வந்த வாதாபி புலிகேசியின் சைன்யத்தை எதிர்ப்பதற்காக மகேந்திரர் பல்லவ சைன்யத்துக்குத் தலைமை வகித்து வடக்கே செல்கிறார். போகும் போது, தம் குமாரரிடம் காஞ்சிக் கோட்டைக்கு வெளியே போவதில்லை யென்று வாக்குறுதி பெற்றுக் கொண்டு செல்கிறார்.

ஆயனச் சிற்பிக்காக அஜந்தா வர்ண இரகசியத்தை அறிந்து வரச் சென்ற பரஞ்சோதி என்னும் இளைஞன் வழியில் பல்லவ சைன்யத்தைச் சேர்ந்து அரும்பெரும் வீரச் செயல்கள் புரிகிறான். அவனைக் காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தமாக்கும் பொருட்டுச் சக்கரவர்த்தி அனுப்பி வைக்கிறார்.

பரஞ்சோதி மாமல்லரிடம் நட்புரிமை பூண்ட பின் ஆயனச் சிற்பியின் அரண்ய வீட்டுக்கு வந்து, எதிரி சைன்யம் நெருங்கி வருவதால் ஆயனரும் அவர் மகளும் ஒன்று காஞ்சிக் கோட்டைக்குள் வர வேண்டும் என்றும், இல்லாவிடில் சோழ நாட்டுக்குப் போகலாமென்றும் தெரிவிக்கிறான்.

பரஞ்சோதியை ரதத்தில் ஏற்றிக் கொண்டு வந்த கண்ணபிரான், குமார சக்கரவர்த்தியிடமிருந்து சிவகாமிக்குக் காதல் ஓலை கொண்டு வந்து கொடுக்கிறான். அதைப் படித்த கிளர்ச்சியினால் சிவகாமி ஆனந்த பரவசமாக நடனம் ஆடுகிறாள்.

நாகநந்தி என்னும் புத்த பிக்ஷு, மாமல்ல நரசிம்மனைப் 'பயங்கொள்ளிப் பல்லவன்' என்று குறிப்பிட்டு, அவன் பல்லவ சிம்மாசனத்துக்குத் தகுதியற்றவன் என்று சக்கரவர்த்தி தீர்மானித்து விட்டதாகச் சொல்கிறார். இந்த வார்த்தைகள் உருக்கிய ஈயத்தைப் போல் சிவகாமியின் செவியில் விழுகின்றன. மாமல்லரின் காதல் ஓலைகளை நெருப்பில் இட்டு எரித்து விட எண்ணிச் சிவகாமி அந்த ஓலைகளை வைத்திருந்த மரப் பொந்தில் போய்த் தேடுகிறாள். பொந்தில் ஓலைகளைக் காண வில்லை.

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## சத்ருக்னன் வரலாறு

பாக்கினி நதிக்கரையில் பல்லவ சைனியத்தின் பாசறையில் ரிஷபக் கொடி கம்பீரமாகப் பறந்த கூடாரத்தின் உள்ளே மகேந்திர சக்கரவர்த்தி வீற்றிருந்தார். அவருக்கெதிரே சக்கரவர்த்தியின் அந்தரங்க ஒற்றனாகிய சத்ருக்னன் நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் வெகுதூரம் பிரயாணம் செய்து வந்தவனாகக் காணப்பட்டான். உடம்பெல்லாம் சொட்டச் சொட்ட வியர்த்திருந்தது. எட்டு மாதத்திற்கு முன்னால் அவனைப் பார்த்ததற்கு இப்போது அடையாளங்கூடக் கண்டுபிடிக்க முடியாதபடி உருவம் மாறிப் போயிருந்தது.

**அமரர் கல்கி**

சக்கரவர்த்தி, சத்ருக்னனை உற்றுப் பார்த்துவிட்டு, ''யார், சத்ருக்னனா?'' என்று கேட்டார்.

''அடியேன்தான், பல்லவேந்திரா!''

''ரொம்பவும் உருவம் மாறிப்போயிருக்கிறாய்.''

"ஆமாம், பிரபு! சக்கரவர்த்தியின் சேவையில் எவ்வளவு கஷ்டங்களை அநுபவித்தாலும் என் தேகம் புஷ்டியடைகிறது!"

"இல்லை; மெலிந்திருக்கிறாய் என்று சொன்னேன். எட்டு மாதத்துக்கு முன்பு உன்னிடம் ஏதோ முக்கியமான காரியத்தை ஒப்படைத்ததாக ஞாபகம். என்ன காரியம் என்று நினைவிருக்கிறதா?" என்று மகேந்திரர் கேட்டார்.

சத்ருக்னன், "நன்றாக நினைவிருக்கிறது, பிரபு! வேறு நினைவே எனக்குக் கிடையாது!" என்றான்.

"மறந்தது நான்தான்; கொஞ்சம் ஞாபகப்படுத்து, பார்க்கலாம்!" என்றார் சக்கரவர்த்தி.

"பிக்ஷுவைப் பின்தொடரச் சொன்னீர்கள்."

"ஓஹோ! அப்புறம்?"

"ஆயனரைக் கவனிப்பதற்கு ஆள் போடச் சொன்னீர்கள்."

"அவ்வளவுதானா?"

"இன்னும் ஒரு கடினமான வேலையும் கொடுத்தீர்கள், பிரபு! குமார சக்கரவர்த்தியின் போக்கு வரவுகளைக் கவனித்து வரும்படி கட்டளையிட்டீர்கள்!"

"ஆம்! ஆம்! ஞாபகம் வருகிறது."

"ஏதேனும் முக்கியமான தகவல் கிடைத்தால், நம்பிக்கையான ஆள் மூலம் செய்தி அனுப்பச் சொன்னீர்கள். மிக முக்கியமான செய்தியாயிருந்தால் என்னையே நேரில் வரச் சொன்னீர்கள்."

"அப்படியானால், மிக முக்கியமான செய்தி இப்போது கொண்டு வந்திருக்கிறாய் போலிருக்கிறது."

"ஆம், பல்லவேந்திரா! வேறு யாரிடமும் அனுப்ப முடியாத செய்தி; அதனால்தான் நானே வந்தேன்."

"ஒவ்வொன்றாகச் சொல், பார்க்கலாம்!"

சத்ருக்னன் நாகநந்தியைத் தான் பின்தொடர்ந்தது பற்றி முதலில் சொன்னான். அந்த வரலாறு பின்வருமாறு:

நாகநந்தி பரஞ்சோதியிடம் ஓலை கொடுத்து அவனை நாகார்ஜுன மலைக்குப் போகும்படி அனுப்பிய பிற்பாடு, தெற்கே கிளம்பிப் போனார். சத்ருக்னனும் அவரைப் பின்தொடர்ந்து போனான். கெடில நதிக்கரையில் அடர்ந்த காடும் சிறிய குன்றுகளும் சூழ்ந்த ஓர் இடத்தில் கட்டியிருந்த புத்த விஹாரத்தை அடைந்து சில தினங்கள் தங்கினார். அங்கே இருந்த புத்த பிக்ஷுக்கள் சிலருக்கு ஏதேதோ செய்தி சொல்லி நாலாபுறமும் அனுப்பினார். அவர்களில் ஒருவர் உறையூருக்கும் இன்னொருவர் கங்கராஜ்யத்தின் தலைநகரான தலைக்காட்டுக்கும் சென்றதாகத் தெரிந்தது.

பிறகு, நாகநந்தி மறுபடியும் தெற்கு நோக்கிப் பிரயாணமானார். கொள்ளிடத்தையும் காவேரியையும் கடந்து நாகப்பட்டினம் சென்றார். அங்கேயிருந்து மதுரைக்குப் பிரயாணமானார். மதுரைக்கு நாகநந்தியும் சத்ருக்னனும் போன சமயம் மாறவர்ம பாண்டியன் கடும் நோய்வாய்ப்பட்டு 'இன்றைக்கோ, நாளைக்கோ' என்றிருந்தான். அடுத்தபடி பட்டத்துக்கு வரவேண்டிய இளம் பாண்டியனுடைய கட்டளையினால் அயலூர்க்காரர் எல்லாரும் சிறையில் அடைக்கப்பட்டார்கள். நாகநந்தியும் சத்ருக்னனும் ஒரே சிறையில் இருக்கும்படி நேர்ந்தது. அங்கே பிக்ஷுவுடன் சிநேகம் செய்து கொண்டான். இவர்கள் சிறையில் இருக்கும் போதே மாறவர்மன் காலமாகி சடையவர்மன் சிம்மாசனம் ஏறினான். பின்னர் இவர்களுக்கு விடுதலை கிடைத்தது. நாகநந்தி புதிய பாண்டியனைச் சந்தித்தார். அவர்களுக்குள் பல தினங்கள் பேச்சு வார்த்தை நடந்தது. இதற்கிடையில் மாமல்லருக்குப் பெண் கொடுக்கும் விஷயமாகக் காஞ்சிக்குப் போன தூதர்கள் திரும்பி வந்தார்கள். மறுபடியும் சிலநாள் நாகநந்திக்கும் சடையவர்மனுக்கும் சம்பாஷணை நடந்த பிறகு, பாண்டியன் நாடெங்கும் படை திரட்டும்படி கட்டளை பிறப்பித்தான்.



போஸ்ட்மேன்: சார், உங்களுக்கு ஒரு ஐடியா குடுப்பேன், நீங்க தப்பா எடுத்துக்கக் கூடாது.

எழுத்தாளர்: என்ன ஐடியா?

போஸ்ட்மேன்: உங்க கதைகளைத் திரும்பி வந்த பிறகு எடைக்குப் போடறதுக்குப் பதிலா, முதல்லேயே போட்டுட்டா உங்களுக்கு ஸ்டாம்ப் செலவு நிறைய மிச்சமாகுமே?

— சீர்காழி. வி. ரேவதி.

நாகநந்தி பிறகு மதுரையிலிருந்து கிளம்பி வடக்கு நோக்கிப் பிரயாணமானார். சத்ருக்னனும் அவரோடு புறப்பட்டான். வழியெல்லாம் புத்த பிக்ஷு பெரும் சிந்தனையில் ஆழ்ந்தவராய்க் காணப்பட்டார். காவேரியையும் கொள்ளிடத்தையும் தாண்டி அவர்கள் கெடில நதிக் கரையில் இருந்த புத்த விஹாரத்துக்கு வந்து சேர்ந்தார்கள். இதற்குள்ளாகச் சத்ருக்னனுக்குப் புத்த பிக்ஷு தன்னை ஒற்றன் என்று தெரிந்து கொண்டிருக்கிறார் என்ற சந்தேகம் உண்டாகியிருந்தது. அச்சமயம் அந்தப் புத்த விஹாரத்தில் ஏற்கெனவே காஞ்சி இராஜ விஹாரத்தில் இருந்த இளம் பிக்ஷு இருந்தான். அந்த இளம் பிக்ஷு சத்ருக்னனை வெறித்து வெறித்துப் பார்த்ததிலிருந்து சத்ருக்னனுடைய சந்தேகம் உறுதிப் பட்டது. எனவே, அன்று இளம்பிக்ஷு சத்ருக்னனுக்கு அளித்த உணவை அவன் உடனே சாப்பிடாமல் நதியின் வெள்ளத்தில் கொஞ்சம் போட்டுப் பார்த்தான். அதைச் சாப்பிட்ட மீன்கள் உடனே நீலநிறமாக மாறிச் செத்துத் தண்ணீரில் மிதந்ததைக் கண்டான். அன்று இரவு நாகநந்திக்கும் இளம் பிக்ஷுவுக்கும் தெரியாதபடி அந்தப் புத்த விஹாரத்தையும் அதை அடுத்திருந்த குன்றுகளையும் சுற்றிப் பார்த்தான். குன்றுகளில் குடைந்திருந்த இரகசியக் குகைகளுக்குள் பலவகைப் போர்க் கருவிகள் சேகரித்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். குன்றுகளைச் சுற்றி வந்த போது ஓர் இடத்தில் கேட்டவுடனே இருதயம் நின்று போகும் படியான அவ்வளவு பயங்கரமான சீறல் சத்தத்தைக் கேட்டான். ஆயிரம் நாக சர்ப்பங்கள் சீறுவதுபோன்ற அந்தச் சத்தம் எங்கிருந்து வருகிறது என்பதைக் கண்டுபிடிக்க அவன் ஆன மட்டும் முயன்றும் முடியவில்லை.

மறுநாள் உதயத்தில் புத்த பிக்ஷு இந்த இரகசிய புத்த விஹாரத்திலிருந்து புறப்பட்டு, சமுத்திரம் போல் அலைமோதிக் கொண்டிருந்த திருப்பாற்கடல் என்னும் ஏரிக்கரை வழியாக வடக்கு நோக்கிச் சென்றார். அவர் அறியாதபடி அவரைப் பின்தொடர்ந்து சத்ருக்னனும் சென்றான். கடைசியில் ஆயனரின் அரண்ய வீட்டை நாகநந்தி அடிகள் அடைந்தார்.

தான் இல்லாதபோது ஆயனரைக் கவனித்துக் கொள்ளுவதற்காகக் குண்டோதரன் என்பவனைச் சத்ருக்னன் விட்டுவிட்டுப் போயிருந்தான். அவன் ஆயனரிடம் சிற்பக்கலையும் சித்திரக் கலையும் கற்கும் சீடனாக அமர்ந்து



## அருள்வாக்கு

முன்னாளில் தாயார் விடிய நாலு நாழிகையிருக்கும்போதே எழுந்திருந்து வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருக்கும் போதே — சாணி தெளிப்பது, கோலம் போடுவது, தயிர் சிலுப்புவது முதலான காரியங்களைச் செய்யும் போதே — புராணத்தில் வரும் புண்ணியமான கதைகளைப் பாட்டாகப் பாடிக் கொண்டிருப்பாள். குழந்தைகள் அதைக் கேட்டுக் கேட்டே புராணக் கதைகளைத் தெரிந்து கொண்டார்கள். தர்மங்களை, ஜீவனுள்ள கதாபாத்திரங்களில் குழைத்துக் கொடுப்பதால் அவை இளம் உள்ளங்களில் ஆழப் பதிந்துவிடும். இதையே பிற்பாடு பௌராணிகர்கள் சொல்லக் கேட்டும், தாங்களே மூல நூலைப் படித்தும் விவரமாகத் தெரிந்து கொண்டார்கள். இதெல்லாம் முற்கால சம்பிரதாயங்கள்.

இப்போது இந்த நல்ல வழக்கங்கள் போய்விட்டன. ஸினிமாப் பாட்டு, பாலிடிக்ஸ், நாவல், பத்திரிகைகள் இவைதான் சின்ன வயதிலிருந்தே எல்லாரையும் இழுக்கும்படியாக ஏற்பட்டிருக்கிறது. இப்போதும் ஸினிமா, டிராமாக்களில் புராணக் கதைகளையும் நடிப்பதால் அந்த அளவுக்குக் கொஞ்சம் புராண ஞானம் உண்டாகலாம். ஆனால் இது சரியான ஞானமாக இருக்குமா என்பது சந்தேகம். புராணப் படத்தைப் பார்த்தாலும் கூட நல்லதைவிட அதிகமாகக் கெட்டதே வந்து சேரும்படி இருக்கலாம். ஏனென்றால் புராணக் கதையை ஸினிமாவாகவோ, டிராமாவாகவோ ஆக்குகிற போது, அதை எத்தனைக்கெத்தனை ஜனரஞ்சகமாகப் பண்ணலாம் என்றுதான் பார்ப்பார்கள். இதனால் காந்தாஸம்மிதத்துக்கு (நல்லதை வலியுறுத்துவதற்காகவே) தரப்பட்ட சுதந்திரத்தைத் தப்பாகப் பிரயோஜனப்படுத்திக் கொண்டு மூலக்கதையை ரொம்பச் சிதைத்து விடுகிற ஹேது அதிகமிருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# ''என் கணவரின் அவசர வேலைகளுடன் பசியும் சேர்ந்துவிட்டால்.....''



என் கணவரின் வேலைகளுக்கிடையே சாப்பிடக் கூட நேரம் கிடைப்பதில்லை. அந்த அவசரத்தில் அவர் சாப்பிட ஏதுவாக புஷ் ஃப்ளேவர் உதவியுடன் "வெஜிடபிள் ரோல்" போன்ற சுவையான பண்டங்களை செய்ய முடிகிறது. நன்றி! புஷ் ஃப்ளேவருக்கே! ஒரு சாதாரண உணவு வகையில் சிறிது மணம் கூட்டி சுவையானதாக மாற்ற முடிகிறது. எப்போதும் அவர் விரும்புவதும் இதுவே!

புஷ் ஃப்ளேவர் இருந்தால் புதுப் புது உணவு வகைகள் தயாரிப்பதுதான் எத்தனை சுலபம். இனிப்போ, காரமோ, எதுவானாலும் அதன் சுவையே தனிதான்!''

பத்து பரபரப்பூட்டும் புஷ் ஃப்ளேவர்களின் வரிசை: கார்டமம் • தூல்கிரீம் • கேவ்ரா • லெமன் • ஆரஞ்ச் • பைனாப்பிள் • ரோஸ் ஒயிட் • ஸ்வீட் ஆல்மண்ட் • டோஃபோலின் • வெனிலா.

ஆயனர் வீட்டிலே இருந்து வந்தான். குண்டோதரன் விசேஷமாகச் செய்தி ஒன்றும் சொல்லவில்லை. சாரதி கண்ணபிரானும் அவன் மனைவி கமலியும் சில முறை அங்கு வந்துவிட்டுப் போனதாக மட்டும் தெரிவித்தான்.

காஞ்சியில், நரசிம்மவர்மரின் போக்கு வரவுகளைக் கவனித்து வரும்படி, கண்ணபிரானுடைய தந்தையைச் சத்ருக்னன் ஏற்படுத்தியிருந்தான். நரசிம்மவர்மர், சக்கரவர்த்தியின் கட்டளையைப் பரிபூரணமாக நிறைவேற்றி வைத்ததாகத் தெரிய வந்தது. சென்ற எட்டு மாதத்தில் காஞ்சியை விட்டு மாமல்லர் வெளியே போகவேயில்லை. காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தம் செய்வதிலேயே பெரும்பாலும் காலத்தைக் கழித்து வந்தாரென்று தெரிந்தது.

மேற்கூறிய விதம் சத்ருக்னன் தான் அறிந்து வந்த வரலாற்றையெல்லாம் கூறி முடித்த பிறகு, சக்கரவர்த்தி, "சத்ருக்னா! என்னுடைய கட்டளையை மிக நன்றாக நிறைவேற்றியிருக்கிறாய். செய்தி இவ்வளவுதானா? உன் முகத்தைப் பார்த்தால் இன்னும் ஏதோ முக்கிய சமாசாரம் இருப்பது போல் தோன்றுகிறதே!" என்று கூறினார்.

"ஆம் பிரபு! சில ஓலைகள் கிடைத்தன. அவற்றைத் தங்களைத் தவிர யாரும் பார்க்கக் கூடாதென்று நேரில் கொண்டு வந்தேன்."

"ஓலையா? என்ன ஓலை?" என்று சக்கரவர்த்தி வியப்புடன் கேட்டுக்கொண்டே கரத்தை நீட்டினார்.

"பல்லவேந்திரா! ஒரு வேளை நான் செய்தது குற்றமாயிருந்தால் மன்னிக்க வேண்டும்...."

சக்கரவர்த்தி துள்ளி எழுந்து, "முட்டாளே! துர்விநீதனுக்குப் புலிகேசி அனுப்பிய ஓலையைத் தடுத்து நிறுத்தி விட்டாயா?" என்று கோப கர்ஜனை செய்தார்.

"இல்லை, பல்லவேந்திரா! மன்னிக்க வேண்டும். நான் சொல்லும் ஓலை யுத்தத்தைப் பற்றியதே அல்ல!"

"நல்லவேளை! எங்கே அப்படி ஏதாவது அசட்டுத்தனமாய்க் குறுக்கிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டாயோ என்று பயந்து போனேன். பின்னே எந்த ஓலையைச் சொல்லுகிறாய்?"

"பல்லவேந்திரா! நான் கொண்டுவந்திருப்பது காதல் ஓலை!"

'ஆ!' என்ற வியப்பொலியுடன் சக்கரவர்த்தி தமது பீடத்தில் அமர்ந்தார். அவருடைய புருவங்கள் நெறிந்தன; நெற்றியில் சுருக்கங்கள் காணப்பட்டன.

"எங்கே? எடு, ஓலையைப் பார்க்கலாம்" என்றார்.

சத்ருக்னன் தலையிலிருந்து முண்டாசை எடுத்தான். அதற்குள்ளேயிருந்த ஓலைச் சுருள்கள் எட்டையும் எடுத்துத் தயக்கத்துடன் சக்கரவர்த்தியிடம் கொடுத்தான்.

மகேந்திரர் ஓலைகளை வாங்கிக் கொண்

டார். சற்று நேரம் ஓலைகளைக் கையிலே வைத்துக் கொண்டு சிந்தனை செய்தார்.

பிறகு ''சத்ருக்னா! இராஜ்யம் ஆளுவதைப் போல் கொடுமையான காரியம் வேறொன்றும் இல்லை. இராஜ்யத்தின் நன்மைக்காக நான் இந்த நீசத்தனமான காரியத்தைச் செய்ய வேண்டியிருக்கிறது! மாமல்லனுடைய குழந்தை உள்ளத்தைக் கிறிப் பார்க்கும் பயங்கரமான பாவத்தைச் செய்யப் போகிறேன்'' என்றார்.

## பதினான்காம் அத்தியாயம்

# மகேந்திரர் தவறு

சத்ருக்னன் கொடுத்த ஓலைகளைப் படித்து வந்தபோது மகேந்திரருக்கு அடிக்கடி கைகள் நடுங்கின. முதலிலே இரண்டு மூன்று ஓலைகளைச் சற்றுச் சாவகாசமாகப் படித்தார். மற்றவையெல்லாம் விரைவாகப் பார்த்து முடித்தார்.

கடைசியில் சத்ருக்னனைப் பார்த்து, ''சத்ருக்னா! இந்த ஓலைகளை நீ கொண்டு வந்திருக்கக் கூடாது; என்னிடம் கொடுத்திருக்கவே கூடாது!'' என்று சோகக் குரலில் கூறினார்.

''பல்லவேந்திரா! மன்னிக்க வேண்டும்!'' என்றான் சத்ருக்னன்.

''உன் பேரில் குற்றம் ஒன்றுமில்லை, சத்ருக்னா! மன்னிப்புக் கேட்பதற்குரிய காரியம் எதுவும் நீ செய்யவில்லை. உன்னுடைய கடமையையே நீ செய்தாய், என் மனத்துக்கு அது எவ்வளவு வேதனை தரும் காரியம் என்பது உனக்கு எப்படித் தெரியும்? அரண்மனைத் தோட்டத்திலே ஓர் அழகான பூஞ்செடி முளைத்தது. அரண்யத்தின் நடுவிலே ஒரு மனோகரமான மலர்க்கொடி தழைத்தது. இரண்டும் இளந்தளிர்கள் விட்டு வளர்ந்தன. பருவ காலத்தில் அரும்பு விட்டுப் பூத்துக் குலுங்கின. அந்தப் பூஞ்செடியையும் மலர்க்கொடியையும் வேரோடு பிடுங்கி நெருப்பிலே போட்டுப் பொசுக்கும் பொறுப்பு எனக்கு ஏற்பட்டிருக்கிறது. சத்ருக்னா! அது எவ்வளவு குரூரமான பொறுப்பு என்பதை நீ கொண்டு வந்த இந்த ஓலைகளிலிருந்து நன்றாக அறிகிறேன்....''

மகேந்திர பல்லவர் பெருமூச்சு விட்டு விட்டு, ''சத்ருக்னா! மாமல்லரின் கோமள இருதயத்தை நான் எவ்வளவு தூரம் புண்படுத்தியிருக்கிறேன், தெரியுமா? எவ்வளவு தூரம் அவன் மன உறுதியைச் சோதித்திருக்கிறேன், தெரியுமா? இதைக் கேள்'' என்று கூறி ஓலையிலிருந்து பின்வரும் பகுதியை வாசித்தார்:—

'என் ஆருயிரே! உன்னை வந்து பார்ப்பதற்கு என் உயிர், உடல், ஆவி அனைத்தும் துடிதுடித்துக் கொண்டிருக்கின்றன. இந்தக் காஞ்சிக் கோட்டையைப்போல் நூறு மடங்கு கட்டும் காவலுமுள்ள கோட்டைக்குள்ளே என்னை வைத்திருந்தாலும் எல்லாக் கட்டுக் காவலையும் மீறிக்கொண்டு உன்னிடம் நான் பறந்து வந்து விடுவேன். கடல்களுக்கு நடுவிலுள்ள தீவில் இராவணன் சீதையைச் சிறை வைத்தது போல் உன்னை, யாராவது வைத்திருந்தால் அங்கேயும் உன்னைத் தேடி வந்தடைவேன். சொர்க்க லோகத்திலே இந்திரனும், பாதாள லோகத்திலே விருத்திராசுரனும் உன்னைச் சிறைப்படுத்தியிருந்தாலும், நான் உன்னை வந்து அடைவதைத் தடைப்படுத்த முடியாது. ஆனால் இதையெல்லாம் காட்டிலும் பெரிதான தடை வந்து குறுக்கிட்டிருக்கிறது. அது என் தந்தையின் கட்டளைதான். தாம் அனுமதி அளிக்கும் வரையில் காஞ்சிக் கோட்டையை விட்டு வெளியே போகக் கூடாதென்று மகேந்திர பல்லவர் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். சிவகாமி! இந்த உலகத்தில் என்னால் செய்ய முடியாத காரியம் ஒன்று உண்டு என்றால், அது என் தந்தையின் கட்டளையை மீறுவதுதான். நெற்றிக் கண்படைத்த சிவபெருமான் என் முன்னால் பிரத்தியட்சமாகி, மகேந்திர பல்லவரின் கட்டளைக்கு விரோதமாக ஒரு காரியத்தைச் செய்யச் சொன்னால், ஒருநாளும் அதை நான் செய்ய மாட்டேன். அவ்வளவு தூரம் என் பக்திக்கு உரியவரான என் தந்தை இப்போது என்னை எப்பேர்ப்பட்ட கொடுமைக்கு ஆளாக்கி விட்டார் தெரியுமா? என்னுடைய உயிரைக் காட்டிலும் எனக்குப் பிரியமான காதலிகள் இருவரையும் நான் சந்திக்க முடியாதபடி செய்து விட்டார். அந்த இரண்டு காதலிகளில் ஒருத்தி ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமி. அவளை அரண்ய மத்தியிலுள்ள தாமரைக் குளக்கரையில் நான் ஏகாந்தமாகச் சந்திக்க விரும்புகிறேன். இன்னொரு காதலி யார் தெரியுமா? அவள் பெயரை உனக்குச் சொல்லட்டுமா? சொன்னால் நீ அசூயை அடையாமல் இருப்பாயா? அவள் பெயர் ஜயலக்ஷ்மி. அந்தக் காதலியை நான் இரத்த வெள்ளம் ஓடும் யுத்த களத்தின் மத்தியில் சந்திக்க ஆசைப்படுகிறேன். சந்தித்து அவள் என் கழுத்தில் சூடும் வெற்றி மாலையுடனே திரும்பி வந்து உன்னைப் பார்க்க விரும்பு

கிறேன்!"

மகேந்திரர் இவ்விதம் வாசித்து வந்தபோது, சத்ருக்னன் தலைகுனிந்து பூமியைப் பார்த்த வண்ணம் நின்றான்.

"கேட்டாயா, சத்ருக்னா! இப்பேர்ப்பட்ட புதல்வனைப் பெறுவதற்கு நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்? இராமனைப் பெற்ற தசரதரைவிட நான பாக்கியசாலி அல்லவா? இராமன் அப்படி என்ன தியாகம் செய்து விட்டான்? இராஜ்யத்தைத் துறந்து சீதையோடும் லக்ஷ்மணனோடும் வனத்துக்குச் சென்றான். இராஜ்யம் ஆளுவதைக் காட்டிலும் வனத்தின் உல்லாச வாழ்க்கையை இராமன் விரும்பியதில் வியப்பு என்ன? ஆனால், தந்தையின் வாக்கைப் பரிபாலனம் செய்யும் பொருட்டு வனத்துக்குப் போவதைக் காட்டிலும் போர்க்களத்துக்குப் போகாமலிருக்க நூறு மடங்கு மன உறுதி வேண்டும். பரிசுத்தமான இளம் உள்ளத்திலே முதன் முதலாகக் காதலித்த பெண்ணைப் பார்க்கப் போகாமல் இருப்பதற்கு அதைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு திடசித்தம் வேண்டும். இத்தகைய கடும் சோதனையில் நரசிம்மன் தேறியிருக்கிறான் என்பதை நினைக்கும் போது, என் உள்ளம் பூரிக்கிறது. ஆனால் சோதனையை ஏற்படுத்திய நானோ படு தோல்வியடைந்தேன். நரசிம்மனையும் சிவகாமியையும் பிரித்து வைத்திருந்தால், அவர்கள் ஒருவரை யொருவர் பார்க்காமலிருந்தால், சிவகாமியின் காதல் வலையிலிருந்து நரசிம்மன் மீண்டு விடுவான் என்று நினைத்தேன். காதலை நெருப்பு என்று கூறுவது முற்றும் பொருத்தமானது. சத்ருக்னா! நெருப்பு சொற்பமாயிருந்தால், காற்று அடித்ததும் அணைந்து விடுகிறது. பெரு நெருப்பாயிருந்தால், காற்று அடிக்க அடிக்க நெருப்பின் ஜ்வாலை அதிகமாகிக் கொழுந்துவிட்டு எரிகிறது. நெருப்புக்குக் காற்று எப்படியோ, அப்படிக் காதலுக்குப் பிரிவு என்று தோன்றுகிறது. பொய்க் காதலாயிருந்தால், பிரிவினால் அது அழிந்து விடுகிறது. உண்மைக் காதலாயிருந்தாலோ, பிரிவினால் அது நாளுக்கு நாள் வளர்ந்து பெரு நெருப்பாய் மூளுகிறது! நரசிம்மன் விஷயத்தில் அப்படித்தான் நடந்து விட்டது. நான் எவ்வளவோ யோசனை செய்து போட்ட திட்டங்களையெல்லாம் காமதேவன் தன்னுடைய மெல்லிய பூங்கணை ஒன்றினால் காற்றில் பறக்கச் செய்துவிடுவான் போலிருக்கிறது. சத்ருக்னா! வாதாபி சக்கரவர்த்தியிடம் தோற்றாலும் தோற்கலாம். கேவலம் மன்மதனுடைய மலர்க் கணைக்கா மகேந்திர பல்லவன் தோற்று விடுவது? ஒரு நாளும் இல்லை!" என்று கூறி மகேந்திர சக்கரவர்த்தி மீண்டும் சிரித்த போது அவருடைய சிரிப்பில் எக்களிப்பு தொனித்தது.

"மாமல்லனுக்கு நான் இட்ட கட்டளையை இந்தக் கணமே மாற்றிவிடுகிறேன். சத்ருக்னா! நான் தரும் ஓலையை எடுத்துக் கொண்டு வாயுவேக மனோவேகமாய்க் காஞ்சிக்குப் போக வேண்டும். தலைக் காட்டிலிருந்து துர்விநீதனுடைய சைனியம் காஞ்சியை நோக்கி வந்து கொண்டிருக்கிறது. அதை எதிர்த்து நிர்மூலமாக்குவதற்கு நரசிம்மன் போர்க்களத்துக்குச் செல்லட்டும். போவதற்கு முன்னால் ஆயனர் வீட்டுக்குப் போய்ச் சிவகாமியைப் பார்த்துவிட்டுப் போவதாயிருந்தாலும் போகட்டும். அதற்கு நான் குறுக்கே நிற்கப் போவதில்லை!"

இதைக் கேட்டதும், சத்ருக்னனுடைய முகத்தில் தோன்றிய விசித்திரமான புன்னகை, "என்னிடம் கூடவா உங்களுடைய கபட நாடகம்?" என்று கேட்பதுபோலிருந்தது.

(தொடரும்)

---

முல்லா, ஒரு நாள் மூன்று தடவை கடை வீதிக்குச் சென்று வந்தார். முதலாளி, "எதற்காக மூன்று தடவை போனாய்?" என்று விசாரித்தார். "முதல் தடவை கோதுமையும், இரண்டாவது தடவை முட்டையும், மூன்றாவது தடவை எண்ணெயும் வாங்கப் போனேன்" என்றார் முல்லா. இதைக் கேட்டுக் கோபம் அடைந்த முதலாளி, "என்னென்ன தேவையாய் இருக்கும் என்பதை யோசித்து, எல்லாவற்றையும், மொத்தமாக வாங்கி வர வேண்டும்" என்று கட்டளை விட்டார்.

மறுநாள் முதலாளி உடல்நலம் சரியில்லாததால், "மருத்துவரை அழைத்து வா" என்று முல்லாவிடம் சொன்னார்.

வெளியே சென்ற முல்லா, மூவருடன் திரும்பி வந்தார்.

"இவர் மருத்துவர் சரி, மற்ற இருவரும் யார்?" என்று எஜமானர் கேட்டார்.

"ஒருவர் வழக்கறிஞர். ஒருவேளை உங்கள் உடல்நிலை மோசமடைந்தால் உயில் எழுத வேண்டும் அல்லவா? மற்றொருவர் ஈமச்சடங்கு செய்பவர். நீங்கள் ஒருவேளை இறந்து விட்டால், அடக்கம் செய்வதற்காக. ஒவ்வொன்றுக்கும் தனித் தனியே போகாமல் ஒட்டுமொத்தமாகவே அழைத்து வந்தேன்" என்றார் முல்லா!

'முல்லாவின் வேடிக்கைக் கதைகள்' என்ற நூலிலிருந்து: நல்லாலம் காசிதாசன்.



# ஆண் குழந்தை

எப்பொழுதையும் விட இந்த முறை ராமேஸ்வரத்தில் கூட்டம் மிகவும் அதிக மாயிருந்தது. பஸ் ஸ்டாண்டுக்கு அருகில் இருந்த மணல்வெளியில் நாற்பது ஐம்பது டூரிஸ்ட் பஸ்களுக்கு மேல் நின்று கொண்டிருந்தன. பூரா வடக்கத்திக்காரர்கள். தோல் மட்டும் சிவப்பாக, உடைகள் எல்லாம் கரேல் கரேல் என அழுக்குடன்:.. ஆறு மணிக்கு பஸ்ஸிலிருந்து இறங்கி இவர்களைப் பார்த்த உடனேயே நினைத்தேன். இன்றைக்கு நாம் சுவாமி தரிசனம் செய்தாற் போலத்தான் என்று.

''என்னண்ணே வேடிக்கை பார்த்துக் கிட்டு நின்னுட்டீங்க'' என்று என் நண்பர் ரங்கசாமி என்னை உசுப்பினார்.

''ஒண்ணுமில்லே... சும்மா'' என்றவாறு பைகளைத் தூக்கிக் கொண்டு,

''வாங்க போகலாம்'' என்றேன். அதற்குள் நண்பரின் மனைவி குழந்தைகளைத் தூக்கக் கலக்கத்திலிருந்து விடுவித்திருந்தார். கடற்கரையை நோக்கி நடந்தோம். கடற்கரை ஜே ஜே என்றிருந்தது. கன்னடமும், தெலுங்கும், இந்தியும் என எல்லா பாஷைகளிலும் கூக்குரல்கள் அங்கே எதிரொலித்துக் கொண்டிருந்தன. ஊடே ஊடே எங்களைப் போல சில பல தமிழ்க் குரல்கள். வரிசையாக நான்கைந்து அய்யர்கள் அமர்ந்து மந்திரம் சொல்லிக் கொண்டிருக்க அவர்களுக்கு முன் ஜனங்கள் பக்தி சிரத்தையுடன் அமர்ந்திருந்தனர்.

''அண்ணே.. நமக்கு ஒரு நல்ல அய்யரைப் புடிங்கண்ணே'' என்றார் என் நண்பர். நான் கண்களால் அங்கிருந்த வரிசையில் நல்லவராக யார் தெரிகிறார்கள் என்று பார்த்தேன். வடக்கு கோடியில் நரைத்த தலையுடன் சிறிது வயதானவராக ஒருவர் உட்கார்ந்திருந்தார். பார்ப்பதற்குக் கண்ணியமான தோற்றம். நண்பருக்கு அவரைச் சுட்டிக்காட்டினேன்.

''நண்பர், ''கேளுங்க'' என்றார்.

நான் அய்யரை நெருங்கி அவாருகில் குத்துக்காலிட்டு அமர்ந்தேன். அவர் என்னை நிமிர்ந்து பார்த்தார்.

''கணபதி ஹோமம் பண்ணணும்.. எவ்வளவு...?'' என்னை மேலே பேச விடாமல் தடுத்த அந்தப் பெரியவர்,

''கணபதி ஹோமம் வீட்டிலே உட்கார்ந்து பண்ணணும். அதெல்லாம் ராமானுஜ சாஸ்திரிகள்தான் செய்வார். அதோ நிக்கிறார் பாருங்கோ, அவர்தான் ராமானுஜ சாஸ்திரிகள். அவர் செய்வார். அவரண்டை கேளுங்கோ'' என்றார். அவர் சுட்டிக்காட்டியவரை நெருங்கிக் கேட்டேன்,

''சாமி, கணபதி ஹோமம் பண்ணணும்...?''

''கணபதி ஹோமம்னா.. வீட்ல உட்கார்ந்து பண்ணணும்.. எதுக்கு? குழந்தைக்காகவா?'' என்றார் அவர்.

''ஆமாங்க.. நம்ம நண்பருக்குத்தான். ஆண் குழந்தை வேணுமின்னு... ரெண்டு பெண் குழந்தை இருக்கு.. ராமேஸ்வரத்துல போயி கணபதி ஹோமம் செஞ்சுட்டு வாங்கன்னு ஜோஸ்யர் சொல்லியனுப்பிச்சாரு.''

''ஓ.. பேஷா பண்ணலாம். ஐந்நூறு ரூபா செலவாகும்...''

''ஐந்நூறு ரூபாயா? '' மலைத்தேன் நான். நண்பரும் கூட.

''என்னண்ணே ஐந்நூறு ரூபாய் கேக்கறாரு...!'' என்றார் நண்பர் திகைப்புடன். புரோகிதர் எங்களைப் போல எத்தனையோ பேர்களைப் பார்த்திருப்பார் போல.. எங்கள் திகைப்பைப் புரிந்து கொண்டார்.



''இதோ பாருங்க... கணபதி ஹோமம்னா இலேசுப்பட்டதில்லை. சாமான்கள்லாம் நிறைய வாங்கணும். அதுக்கு ஒங்கள்ட்ட பணம் இல்லேன்னா 'நாக சாந்தி' பண்ணிக்கோங்க. ஆண் குழந்தை இல்லாதவங்களுக்கு இங்க அதுதான் பண்றது. அடுத்த வருஷம் ஆண் குழந்தையோட வருவா. அதுக்கு இருநூறு ஆகும். இது இங்க கடற்கரையிலேயே செய்யறது...'' என்றார் சாஸ்திரி.

''ம்... வீட்ல பொம்பளைங்க வந்திருக்காங்க.. அவங்களை ஒரு வார்த்தை கேட்டுட்டு வந்துடறோம் சாமி'' என்றார் நண்பர்.

''பேஷா...! தாராளமா கேட்டுண்டு வாங்கோ... இங்க யாரை வேணாலும் கேட்டுண்டு வாங்கோ'' என்றார்.

நாங்கள் நகர்ந்தோம்.



**வே**றொரு புரோகிதரை நெருங்கிக் கேட்ட போது, இந்த ஊரில் ராமானுஜ சாஸ்திரிகள் மட்டுமே கணபதி ஹோமம் செய்வார் என்றுசொன்னார். இதற்குள் நண்பரின் மனைவி, குழந்தைகளை அழைத்துக் கொண்டு எங்களைத் தேடிக் கொண்டு வந்துவிட்டார்.

''என்னங்க...! என்ன ரோட்ல நிக்க வச்சுட்டு நீங்க பாட்டுக்குக் கடற்கரைல உலாத்தறீங்க?'' என்றார் கிண்டலாக.

''சாந்தி, எல்லாம் கேட்டாச்சு. கணபதி ஹோமம் இங்க ஒரே ஒரு புரோகிதர் செய்றாரு. ஐந்நூறு ரூபா ஆகும்னு சொல்றாரு. அதுக்குப் பதிலா ''நாக தோஷ சாந்தி''ன்னு ஒண்ணு இருக்காம். அதுக்கு இருநூறு ரூபா ஆகுமாம். அது செஞ்சாப் போதுமாம். நிச்சயமா ஆண் குழந்தை பொறக்குமாம்'' என்றார் நண்பர், மனைவியைப் பார்த்து.

''அதனால் என்னங்க. நாம ரெண்டையுமே செஞ்சுருவோம். எதுலயும் குறை வைக்கக் கூடாது. கணபதி ஹோமம், நாக தோஷ சாந்தி ரெண்டையுமே செஞ்சுடுங்க'' என்றாள் சாதாரணமாக.

''சாந்தி, ரெண்டும் சேர்த்துச் செய்யணும்னா எழுநூறு ரூபா வேணும். என்கிட்டே இருக்கிறது அறுநூறு ரூபாதான்!''

''என்கிட்டே நூறு ரூபா இருக்கு'' என்றேன் இடையில் நான்.

''என்கிட்டே கொஞ்சம் பணம் இருக்குங்க'' என்றவாறு நண்பரின் மனைவி இடுப்பிலிருந்த சுருக்குப் பையைத் திறந்து நூறு ரூபாய்களாக எழெட்டை எடுத்து நண்பரின் கைகளில் போட்டாள்.

''இனி என்னாண்ணே! ஜமாய்ச்சுடுவோம்'' என்று சொல்லி விட்டு ராமானுஜ சாஸ்திரிகளை நோக்கி நடந்தேன்.

**''சா**மி... கணபதி ஹோமம், நாகசாந்தி ரெண்டுமே செய்துடுங்க, நல்லபடியா செய்ங்க.. நீங்க கேட்ட காசைக் குடுக்கறோம்'' என்றேன் நான்.

''நல்லா செஞ்சு தர்றேன். இதுவரைக்கும் மூவாயிரம் நாலாயிரம் பேருக்குச் சாந்தி செஞ்சுருக்கேன். யாருக்கும் மிஸ்ஸான இல்லே. ஆண் குழந்தையோட திரும்பவும் வந்து என்னைப் பார்த்துட்டு, சாமியையும் சேவிச்சுட்டுப் போவா... உங்களுக்கு என் விலாசம் தர்றேன். குழந்தை பொறந்தவுடனே என்னைத் தேடி வருவேள் பாருங்கோ...'' என்றார் சாஸ்திரிகள்.

''எப்படியோ ஆண் குழந்தை பிறந்தாச் சரி'' என்றாள் நண்பர் மனைவி.

''அதுக்கு நான் கியாரண்டி... நாக தோஷ பரிகாரம் ஒண்ணு செஞ்சாலே போறும். நாம கணபதி ஹோமம் வேறே சேர்த்துச் செய்யறதா.. நிச்சயம் குழந்தை உண்டு. கவலைப்படாதேங்கோ... நம்பிக்கையோட இருங்கோ'' என்றார் சாஸ்திரிகள் கனி

நதி



''பூவா, தலையா?' 'சட்டுன்னு சொல்லு''

''எதுக்கு?''

''எந்தக் கட்சியிலே டிக்கெட் கேக்கறதுன்னு தெரியணும்!''

றென்ற குரலில். அவர் குரலே நம்பிக்கை தருவதாக இருந்தது.

''தம்பதிகள் இரண்டு பேரும் கடல்ல போயி ஒரு முழுக்குப் போட்டுட்டு இப்படி முன்னாலே வந்து உட்காருங்கோ'' என்றார்.

குழந்தைகளை நான் பார்த்துக் கொள்ள, நண்பர் மனைவியின் கையைப் பிடித்துக் கொண்டு கடலுக்குள் இறங்கினார்.

இருவரும் கடலில் முழுக்குப் போட்டு விட்டு ஈர ஆடையுடன் சாஸ்திரிகளின் முன் வந்து அமர்ந்தார்கள். சாஸ்திரிகள் அவர்கள் முன், மண்ணால் லிங்கம் போல் கையால் பிடித்து வைத்தார். பின் அந்த லிங்கத்தின் முன் சில கோடுகளைப் போட்டார். மந்திரங்கள் சொன்னார். நண்பரையும் அவர் மனைவியையும் சொல்லச் சொன்னார். அப்போது ஆண்களும் பெண்களுமாகப் பத்து பேர் கொண்ட கூட்டம் ஒன்று அவரிடம் வந்து ஏதோ பரிகாரம் செய்ய வேண்டும் என்று சொன்னது. அவர்களையும் ஜோடி ஜோடியாகச் சுற்றி அமரச் செய்தார். பின் என் நண்பரையும் அவர் மனைவியையும் பார்த்து,

''இந்த பிடிச்ச லிங்கத்தைக் கையில் எடுத்துட்டுப் போயி கடல்ல கரைச்சு விட்டுட்டு முப்பத்து ஆறு வாட்டி சேர்ந்து முங்கிட்டு வாங்கோ'' என்றார்.

''முப்பத்தாறு வாட்டியா?'' நண்பர் திகைக்க,

''பின்னே குழந்தை வேண்டாமா?'' என்று சாஸ்திரிகள் விரட்டினார். நண்பரும் அவர் மனைவியும் மீண்டும் கடலுக்குள் இறங்கினர். சாஸ்திரிகள் தன் முன் அமர்ந்திருந்த ஐந்து ஜோடிகளுக்கும் கணீரென்ற குரலில் மந்திரம் சொல்ல ஆரம்பித்தார்.

முப்பத்து ஆறு முழுக்கு போட்டு விட்டு நண்பரும் அவர் மனைவியும் திரும்பி வரவும், அமர்ந்திருந்த ஐந்து ஜோடிகளும் மணல் லிங்கத்தை எடுத்துக் கொண்டு கடலை நோக்கி நடந்தனர். ஆச்சரியமாயிருந்தது எனக்கு. நண்பரையும் அவர் மனைவியையும் மீண்டும் அமரச் செய்து மந்திரங்கள் சொல்ல ஆரம்பித்தார் சாஸ்திரிகள்.

முடியில் சில பூக்களையும், செம்புக் கம்பியில் செய்யப்பட்ட நாகர் ஒன்றையும் அவர்கள் கையில் கொடுத்து, கடலில் கரைத்து விட்டு வரச் சொன்னார். செய்தார்கள்.

''நாகதோஷ பரிகாரம் முடிஞ்சுடுத்து. இனி கணபதி ஹோமம்தான் பண்ணணும். பரிகாரத்துக்கு உண்டான பணத்தை இங்கே குடுத்துடுங்க. இங்கே வந்து தோஷ பரிகாரம் பண்றவா ஒரு அஞ்சோ ஏழோ அந்தணர்களுக்கு போஜனத்துக்குக் கொடுக்கறது சம்பிரதாயம். நல்லதும் கூட. ஏதோ நீங்க இஷ்டப்பட்டதைக் குடுங்கோ...'' என்றார்.

''சாமி... பணத்தப் பத்தி எங்களுக்குக் கவலையில்லை. இன்னும் வேணாலும் கேளுங்கோ. தர்றேன். நல்லபடியா செய்து விடுங்க. ஆண் குழந்தை பிறக்கட்டும் அதுக்கப்புறம் நீங்க என்ன கேட்டாலும் தர்றேன்'' என்றார் நண்பர்.

பேசியதற்கு மேல் இருபத்தைந்து ரூபாய் கொடுத்தார். ''சந்தோஷம்!'' என்று சொல்லி சாஸ்திரிகள் வாங்கிக் கொண்டு பின்னால் திரும்பிக் கடலை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஓர் உள்ளூர்க்காரனை அழைத்தார்.

''அம்பி... இவர்களுக்குக் கணபதி ஹோமம் செய்யணும். நம்ப வீட்டுக்கு அழைச்சிட்டுப் போயி விட்டுட்டு, மாமிகிட்டே சொல்லி ஏற்பாடு செய்யச் சொல்லு.. என்ன சாமான் வேணுமோ வாங்கிக் கொடுத்துட்டு வந்துடு'' என்றார்.

''சாமி டிபன் எதுவும் சாப்பிட்டுக்கலாமா... மணி பத்தாயிருச்சு...'' என்று கேட்டார் நண்பர்.

''என்ன அவசரம் எல்லாம் முடியட்டும். அப்புறம் நிம்மதியாச் சாப்பிடலாம். இதெல்லாம் உபவாசத்துலதான் செய்யணும்'' என்றார் சாஸ்திரி.

உள்ளூர்க்காரனுடன் நடந்து, சாஸ்திரி வீட்டுக்கு வந்தோம். அக்ரஹாரத்தின் ஆரம்பத்திலேயே இருந்தது அவர் வீடு.

''மாமி... மாமி'' என்று அவன் அழைக்க..

''இதோ வர்றேன்'' என்று இனிமையான குரலோடு ஒரு பெண்மணி வெளியே வந்தாள். நல்ல சிவப்பு. காதிலும் மூக்கிலும் வைரங்கள் டாலடிக்க, கழுத்தில் இரண்டு மூன்று தங்கச் சரங்கள் தொங்கின. முப்பத்தைந்து முப்பத்தாறு வயதிருக்கலாம்.

''இவாளுக்குக் கணபதி ஹோமம் செய்யணுமாம். அதான் சாஸ்திரிகள் இவங்களை வீட்டுக்கு அனுப்பிச்சார். வேண்டியது தயார் செய்வேளாம். சாமான் ஏதாணும் வேணுமானாச் சொல்லுங்கோ. வாங்கி வரேன்'' என்றான் அந்த ஆள் பொறுப்பாக.

''சாமான்களெல்லாம் இருக்கு. எதுவும் வாங்க வேண்டியதில்லை. நான் ஏற்பாடு செய்யறேன். அவரைச் சித்த சுருக்க வரச்


நான் ஸின்த்தால் உபயோகிக்கிறேன். நீங்கள்?


Godrej
NEW
CINTHOL
DEODORANT AND COMPLEXION SOAP
CINTHOL

வினோதின் உடலுக்கும் உள்ளத்திற்கும் தன்னம்பிக்கை தருவது ஸின்த்தால்.
MADISON-G-001-TAM

சொல்றியா. குழந்தைகள்லாம் சாப்பிடாம இருக்கும் போல இருக்கே...'' என்றாள் மாமி. பின் எங்களைப் பார்த்து, ''உள்ளே வந்து உட்காருங்கோ...'' என்றாள். வெளி வராந்தாவில் பெஞ்சு போடப்பட்டிருந்தது. கூடத்தில் ஹோமகுண்டம் நிரந்தரமாகக் கட்டப்பட்டுச் சுத்தமாக மெழுகப்பட்டிருந்தது. மாமி உள்ளே சென்று இரண்டு தட்டுகளில் இட்லிகள் வைத்து நண்பரின் குழந்தைகளுக்குக் கொண்டு வந்து தந்தாள்.

''இருக்கட்டும் மாமி. நாங்க கடைசியில சாப்பிடப் போறோம்'' என்றேன்.

''அதனால என்ன பரவாயில்ல.. பெரியவாளுக்குச் சரி.. குழந்தைகள் என்ன பாவம் பண்ணித்து. பட்டினியோட இருக்கிறதுக்கு'' என்று சொல்லி விட்டுக் குழந்தைகளின் கன்னத்தை அன்பாகத் தடவினாள். வீடு பளபளவென்று சுத்தமாக வைக்கப்பட்டிருந்தது. மாமி கூடத்திலிருந்த அலமாரியைத் திறந்து சாமான்களை எடுத்து வைக்க ஆரம்பித்தாள். அடிக்கடி ஹோமங்கள் நடக்கும் போல. அத்தனை சாமான்களும் ஸ்டாக் இருந்தன..

''நீங்க எந்த ஊர்லருந்து வர்றீங்க'' என்று மாமி உள்ளே இருந்தவாறு குரல் கொடுத்தாள்.

''போடிநாயக்கனூர் மாமி'' என்றாள் நண்பரின் மனைவி.

''அப்படியா... சரி...'' சிறிது நேரம் மௌனம். நண்பரின் மனைவி எழுந்து வராந்தாவுக்கும் கூடத்திற்கும் நடுவில் மாமி கண்படும்படியாக நின்று கொண்டாள். அப்பொழுதுதானே பேசுவதற்கு வசதியாக இருக்கும். இந்தப் பெண்களுக்குப் பேச்சு ஒன்று இருந்தால் போதுமே. சாப்பாடு கூடத் தேவையில்லையே..!

''வீட்டை ரொம்பச் சுத்தமா வெச்சிருக்கீங்களே...'' என்று சிலாகித்தாள் நண்பரின் மனைவி.

''மாமியைப் பார்த்துக் கத்துக்கோ'' என்றார் நண்பர். மாமி சிரித்தாள் — வெள்ளி மணியை ஆட்டியதைப் போல. நண்பரைப் பார்த்து அவர் மனைவி முறைக்க..

''உங்க அகம் குழந்தை குட்டிகள் இருக்கிற வீடு. அப்படித்தான் இருக்கும். எனக்கு வேறு வேலை இல்ல... சும்மா சும்மா க்ளீன் பண்ணி வைக்கிறேன். இங்கே என்ன குழந்தையா குட்டியா கலைக்கறதுக்கும் கொட்டுறதுக்கும்... உங்காத்துல எத்தனை வேலை இருக்கும். குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி.. உங்களுக்குச் செஞ்சு.. பெண்கள் கஷ்டத்தையும் பாருங்கோ''—மாமியும் இப்போது வராந்தாவில் வந்து நின்று கொண்டாள்.

''உங்க குழந்தைகள் எங்கே வெளியூர்ல படிக்கிறாங்களா?''

''எங்க குழந்தைகளா...! கல்யாணம் ஆகிப் பதினெட்டு வருஷமாச்சு. இன்னும் எங்களுக்குக் குழந்தை இல்லை'' என்றாள் மாமி. தொண்டை கமற.




# பரீட்சைக்குப் படிப்பது எப்படி?

• வருடம் முழுவதும் ஒழுங்காகப் படித்திருந்தால் கவலையே இல்லை. ஆனால் அவ்வாறு இல்லையெனில் நீங்கள் படிக்க வேண்டிய சப்ஜெக்டுகள் எத்தனை? எஞ்சியுள்ள நாட்கள் எவ்வளவு என்று கணக்குப் போடுங்கள். திட்டமிட்டு ஒவ்வொரு சப்ஜெக்டுக்கும் நாட்களைப் பகிர்ந்து ஒதுக்குங்கள். உங்களுக்குக் கடினமாக உள்ள சப்ஜெக்டுக்குக் கூடுதல் நேரம் ஒதுக்குங்கள். இந்த அட்டவணையிலிருந்து மாறாதீர்கள். தினமும் இரண்டு மூன்று சப்ஜெக்டுகளை மாற்றி மாற்றிப் படித்தால் 'போர்' அடிக்காமல் இருக்கும்.

• கணக்குக்கு மட்டும் தினமும் சிறிது நேரம் ஒதுக்கி ஒரே மாதிரியான கணக்குகளைத் திரும்பத் திரும்பப் போட்டுப் பழகுங்கள். அது நன்கு மனத்தில் பதிந்த பிறகு, வேறொரு டைப் கணக்கில் கவனம் செலுத்துங்கள்.

• ஒரு மணி நேரத்துக்கு ஒரு முறை படிக்கும் மேஜையிலிருந்து எழுந்து ஒரு சின்ன 'வாக்' போய்விட்டுத் திரும்புங்கள்.

• படிக்கும் போது 'கூன்' போடாதீர்கள். சரியான நிலையில் உட்காராவிட்டால் சீக்கிரமே சோர்வடைந்து விடுவீர்கள்.

• 'படிப்பு,' 'படிப்பு' என்று அதிலே மூழ்கி உணவு விஷயத்தில் அலட்சியமாக இருக்காதீர்கள். வேளாவேளைக்கு மிதமான, சத்துள்ள உணவைச் சாப்பிடுங்கள்.

• படிக்கும் நேரத்தில் கொரிக்க, காரட் போன்ற பச்சைக் காய்கறிகள் அல்லது பழங்களே நல்லது. எண்ணெய்ப் பண்டங்கள் அல்ல.

• தினமும் ஏழு மணி நேரமாவது தூங்குங்கள். தூங்கப் போகுமுன் முடியுமானால் ஒரு கப் சூடான பால் அருந்துவது நலம்.

• காலையில் சீக்கிரம் எழுந்து படிப்பதே மிகச் சிறந்தது. புத்துணர்ச்சியுடன் இருப்பதால் பாடம் மனத்தில் பளிச்சென்று பதியும்.

• எந்தக் காரியத்தைச் செய்தாலும் முழுக் கவனத்தையும் அதிலேயே செலுத்துங்கள் — சாப்பிடும் போது கூடத்தான்!

• வீடியோ, டி.வி. — சினிமா போன்றவற்றைப் பரீட்சை முடியும் வரை உங்கள் வாழ்க்கையிலிருந்து வெளியேற்றுங்கள். சுயக் கட்டுப்பாடுகளை விதித்துக்கொண்டுகடைப்பிடித்தால்தான் இருக்கும் நேரத்தைப் பயனுள்ளதாக்கிக் கொள்ள முடியும்.

நீங்கள் கண்டிப்பாகச் செய்யக் கூடாதவை:

• உங்களுக்குப் பிடித்த பாடத்தில் மட்டும் அதிகமாகக் கவனம் செலுத்தி மற்றவற்றைப் புறக்கணித்தல்.

• பதற்றத்துடன் வெவ்வேறு பாடங்களை மாறி மாறிப் படிப்பது. (ஒன்றை முழுமையாக முடிக்காமல் அடுத்ததற்குப் போகாதீர்கள்.)

• கோப்பை கோப்பையாகக் காப்பி குடிப்

பது — இதனால் ஒரு பயனும் கிடையாது!

ஆண்டு முழுதும் சரியாகப் படிக்காமல் இருந்துவிட்டு இப்போதுதான் 'ஞானோதயம்' அடைந்து வாரிச் சுருட்டிக் கொண்டு படிப்பவர்களுக்கு:

- கடந்த பத்து ஆண்டுகளின் கேள்வித் தாள்களைச் சேகரித்து அவற்றிலுள்ள கேள்விகளுக்கு விடைகளைத் தயாரித்துப் பாருங்கள். பயிற்சியோடு தன்னம்பிக்கையும் பெறுவீர்கள்.
- பாடத்தின் சில பகுதிகள் முக்கியமானவை என்று ஆசிரியர் கூறக் கேட்டிருப்பீர்கள். அவற்றில் கூடுதல் கவனம் செலுத்துங்கள்.
- படிக்கும்போதே புத்தகத்தின் மார்ஜின் பகுதியில் உங்கள் தாய்மொழியில் குறிப்பு எழுதுங்கள். படித்தவற்றை நினைவுகூர இது உதவும்.
- நீண்ட பட்டியல்களை மனப்பாடம் செய்ய வேண்டி வந்தால் அதிலுள்ள பெயர்களின் முதல் எழுத்துக்களை Vibgyor பாணியில் அணிவகுத்து நினைவு வைத்துக் கொள்ளுங்கள்.

பரீட்சை தினத்தன்று:

- அளவாகச் சாப்பிட்டுவிட்டுப் பரீட்சைக்குப் போங்கள்.
- கேள்வித் தாளை முழுக்கப் படித்து, கேள்வியைப் புரிந்து கொள்ளுங்கள்.
- எழுதும் விடைகளைச் சரிபார்க்கப் பத்து நிமிடங்களை ஒதுக்கிவிட்டு, எஞ்சியுள்ள நேரத்தைக் கேள்விகளுக்குத் தக்கவாறு பிரித்துக் கொண்டு எழுதுங்கள்.
- நன்றாகத் தெரிந்த விடைகளை முதலில் எழுதிவிட்டுப் பிறகு மற்ற, அவ்வளவாகத் தெரியாத விடைகளை அணுகுங்கள். எந்தக் கேள்விக்கும் விடையளிக்காமல் விடாதீர்கள். பகுதியளவு விடையேனும் எழுதுங்கள் — கொஞ்சமேனும் மதிப்பெண்களைப் பெற்றுத் தரும்.
- விடைகளுக்குத் தேவையானால் படங்கள் வரையுங்கள்; வரைபடங்களில் தெளிவாக, சுத்தமாகக் குறிப்பு எழுதுங்கள்.
- சிறு குறிப்புக்கள் எழுதும் போது சுருக்கமாக, சாரமாக எழுதுங்கள்.
- தேவையான இடங்களில் சரியான மேற்கோள்களைக் கொடுங்கள்.
- பதற்றமோ, பயமோ தேவையேயில்லை. அவற்றால் ஒரு பயனுமில்லையே!

பெஸ்ட் ஆஃப் லக்!

— ஹிந்துஸ்தான் டைம்ஸில் பாரதி சுகதங்கர்.

# நான் புடிச்ச மாப்பிள்ளை

ஒரு குடுவையை எடுத்துக் கொள்க. ஜனகராஜ், நிழல்கள் ரவியின் நடிப்புத் திறன், 'பரவாயில்லை' தரத்தில் கதை. இரண்டையும் அதில் போடவும். நெகிழ்ச்சி, நகைச்சுவை இரண்டையும் சற்றுக் கூடுதலாகச் சேர்க்கவும். கவர்ச்சி ஒரு அவுன்ஸ் (ஐஸ்வர்யா) குடும்பப்பாங்கு ஒரு சிட்டிகை (சரண்யா), நகைச்சுவை கலந்த வில்லத்தனம் அரை அவுன்ஸ். (கவுண்டமணி)... இவற்றைச் சேர்த்துக் கலக்கிப் பெறும் புதுத் தயாரிப்பு — 'நான் புடிச்ச மாப்பிள்ளை!

ஏக்கர் பரப்பளவு கதை. அதன் அநியாய சுருக்: நிழல்கள் ரவியின் எதிர்வீட்டு முறைப் பெண் ஐஸ். மாமா கவுண்டமணி. குணங்கள்: பெரிய, அலட்டல், ஏமாற்று, உதவாக்கரை. நேர் எதிர், பக்கத்து ஊர் ஜனகராஜ்: நேர்மை, குழந்தைத்தனம், நல்ல மனசு. இவரின் குணங்கள் ரவியைக் கவர்தல். அவர் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடிவு. மனைவியாய் சரண்யா. தன் வீட்டு, எதிர் வீட்டு உறவில் விரிசல். விபத்து. மனைவியின் மரணம். கடைசித் தருண, 'அப்பாவைக் காப்பாற்றுங்கள்' — சத்தியம். இரண்டாவது மனைவியாய் ஐஸ்வர்யா. குடும்பப் பிரச்னைகள். ஜனகராஜைத் துரத்த, கவுண்டமணியின் வயிற்றுவலி திட்டங்கள். முடிவு.

சந்தேகம்: பொருத்தமான தலைப்பு: 'நான் புடிச்ச மாமனார்?'

ஜனகராஜ் ஒரு தூள் ராஜ். பக்கத்து வீட்டுக்காரரின் கோழி விற்ற ஒன்பது ரூபாயைக் காப்பாற்ற அவரின் முயற்சி; சேமியா ஐஸ் சகிதமாகத் தரை ராட்டினம் சுற்றுதல்; நொறுங்கிவிட்ட முதலிரவுக் கட்டிலை இரவல் வாங்கியவரிடம் இவர் போடும் கூச்சல்; கோவணத்துடன் வயல் வேலை — என நவரசம் இழையோடும் நடிப்பு. நிழல்கள் ரவிக்கும் இது ஓர் ஆயுட்கால ரெகார்ட். மென்மையும் மிடுக்கும் கொண்ட பஞ்சாயத்துத் தலைவராக... ஆயின், கனவுக் காட்சியென்றாலும் முன்வந்த படங்களின் சாயலில் அந்த வலைவிரிப்புப் பாடல்தான் நெருடுகிறது.

இடைவெளிக்குப் பின் இசை — சந்திரபோஸ். மாசி மாதத்தில் தீபாவளிப் பாடல் அந்நியமாயிருந்தாலும் மனசில் பதிந்தது நாற்றுப் பாடல். ஆனால் ஒரு எம். ஜி. ஆர். படப்பாடல், ஒரு ரஜினிகாந்த் படத்துப் பழைய பாடல் என்று... வழக்கமாகி விட்ட ஃபார்முலா எரிச்சலூட்டுகிறது.

இது சீடர்கள் குருவை மிஞ்சிக் கொண்டிருக்கிற சீஸன். இந்தப் படத்து டைரக்டர் வி. சேகர் டைரக்டர் பாக்யராஜின் சீடர். பாராட்டிக் கைகுலுக்கலாம். ஆனால் ஸாரே. அத்தனை பெரிய பாறாங்கல் விழுந்து கால் நொறுங்கியவன் தாவிக் குதித்து உதைத்துச் சண்டை விடுவது; ஜனகராஜ் அவ்வப்போது ஒருமையில் பேசும் சென்னைத் தமிழ்; கவுண்டமணியின் 'இழபாடு' வசனம்... ஐஸ்வர்யாவை உபயோகப்படுத்தி, எஸ்டாப்ளிஷ் செய்து தந்திருக்க வேண்டிய முடிவை, 'இன்னும் இரண்டே முழ ஃபிலிம்தான் மிச்சமிருக்கிறது' என்று தயாரிப்பாளர் எச்சரித்தாற்போல் முடித்த அவசர அவசரம், ஏன்?

— சுந்தர்ஜி

# 9 ஆகாச

## இதுவரை மலர்ந்த தாமரை மடல்கள்

தந்தையில்லாப் பிள்ளை துருவ் ஒரு மேதை. அதனாலேயே சுலபமாக அடையக் கூடிய எதையும் அலட்சியப்படுத்தி வெறுக்க ஆரம்பிக்கிறான். அவனை விரும்பும் சந்தியா முதலில் இதைப் புரிந்து கொள்ளா விட்டாலும், போகப் போக உணர ஆரம்பித்து, சுயகௌரவத்தை விட்டுக் கொடுக்கா மலும், இயல்பாகவும் நடந்து கொள்கிறாள். இது அவர்களிடையே வாக்குவாதங்களுக்கு இடம் தரு கிறது.

துருவ்வின் தந்தை விட்டுச் சென்ற தொழில் வர்த்தக நிறுவனத்தை அவன் தாய் மங்களா தொடர்ந்து நடத்தி வருகிறாள். அவளிடம் 'பாது காப்புத் தளவாடங்கள் இறக்குமதி' செய்ய ஒரு புது 'ஏஜென்ஸி'த் தொடங்கும்படி சொல்கிறான் சன்னா. வெளிநாட்டில் பதிவு செய்து கொள்ள வேண்டிய இந்த ஏஜென்ஸி மூலம் 'லாபத்தை' உயர் மட்டத்தில் பகிர்ந்து கொள்வதற்கான திட்டமிது என்பதை உணர்ந்த மங்களா எரிச்சலடைகிறாள்.

இதற்கிடையில் துருவ், பட்சணக்காரர் சடகோப வின் மகள் கோமளாவைத் தான் மணந்து கொள்வ தாகக் கூறுவது அவளைத் திடுக்கிட வைக்கிறது.

---

துருவ் மாடிக்குப் போய் விட்டான். மங்களா, என்ன செய்வதென்று தெரியா மல் திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தாள். சடகோபன் மாறி மாறித் தம் மகளையும் மங்களாவையும் பார்த்துக் கொண்டே நின் றார். கோமளாவின் முகத்தில் ஒரு பீதி உணர்வு வெளிப்படையாகத் தெரிந்தது.

இது எப்படிச் சாத்தியம்? — மங்களா அந்தஸ்து ஏற்றத்தாழ்வுகளைப் பற்றி யோசிக்கவில்லை. ஆனால் படிப்பு அதிக மில்லாத, மிரண்டு போய் நிற்கும் இப் பெண்ணைத் துருவ் மணக்கப் போவதாகச் சொன்னதற்கு என்ன காரணம்? பச்சா தாபமா? அப்படியானால், இது அவன் இப் பெண்ணுக்குச் செய்யும் நியாயமாகாது. பச்சாதாப உணர்வில் செய்யப்படும் எந்தக் காரியமும் வெற்றியடைவதில்லை. அல்லது, இவ்வாறு செய்வதின் மூலம் தன்னைத் தானே வருத்திக்கொள்வதாக இவன் நினைக் கின்றானா? அப்படி வருத்திக் கொள்ளக் காரணம்? சிறிது நேரத்துக்கு முன்பு சந்தியா அவனுடன் ஃபோனில் பேசியது அவள் நினைவுக்கு வந்தது.

''சத்தியமா நான் அவரை ஒண்ணும் கேட்கலே. அவராத்தான்...'' என்று சடகோபன் பயந்து கொண்டே, மங்களா எதிரில் கைகளைப் பிசைந்தவாறு நின்றார்.

மங்களா ஒன்றும் பேசாமல் கோமளா வைப் பார்த்தாள். அழகான பெண்தான். நல்ல உடையுடுத்து அலங்காரம் செய்து கொண்டால், நிச்சயமாகப் 'பெரிய இடத்துப் பெண்' என்றுதான் சொல்வார் கள். ஆனால்... ஆனால்... இவள்தான் தன் மருமகளாகப் போகிறவள் என்ற உண்மை யைத் தன்னால் ஜீரணித்துக் கொள்ள முடிய வில்லையே! இதுவும் துருவ்வின், முன் கூட்டி வரையறுத்துச் சொல்ல முடியாத, மனச்சலனங்களில் ஒன்றாக இருந்துவிடக் கூடாதா?

அவள் எழுந்து மாடிக்குச் சென்றாள். துருவ் 'பால்கனி'யில் நின்று கொண்டிருந் தான்.

''துருவ், ஆர் யூ ஸீரியஸ் அபௌட் திஸ்? இந்தப் பொண்ணைக் கல்யாணம் பண் ணிண்டு அவளோட உன்னால் இருக்க முடி யுமா?''

''ஏன் முடியாது?'' என்று குரலைச் சற்று



# தாமரை

உயர்த்திக் கேட்டான் துருவ்.

"உனக்கும் அவளுக்கும் 'காமனா' என்ன இருக்கு?"

"எதுக்காக இருக்கணும்?"

"கல்யாணம்னா என்ன நினைச்சிண்டிருக்கே?"

துருவ் பதில் கூறவில்லை.

லுக்... கல்யாணம்ங்கிறது, நீ பாதிப் பாதி வாசிச்சுட்டுப் போற வீணைக் கச்சேரியில்லே... வாழ்க்கை பூரா நிலைச்சு நிக்க வேண்டிய ஒப்பந்தம்.

"வில் யு ஷட் அப்?" என்று திடீரென்று கோபத்தில் கத்தினான் துருவ்.



அவன் இவ்வாறு குரலெழுப்பி மஞ்சுளா கேட்டதேயில்லை. இது அவளை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இவனுக்கு என்ன பிரச்னை? 'பாதிப் பாதி வாசிச்சுட்டுப் போற வீணைக் கச்சேரி' என்று அவள் கூறியது அவனைப் பலஹீனமான இடத்தில் தாக்கியிருக்கக் கூடும்.

"ஐ ஆம் ஸாரி" என்றான் துருவ்.

மஞ்சுளா அவனருகில் சென்று அவன் தோளைத் தொட்டுச் சொன்னாள்: "நீ இந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னா அதை என்னாலே தடுக்க முடியாதுன்னு எனக்குத் தெரியும். உன்னுடைய வாழ்க்கை உன்னுடையது. ஆனா, அந்தப் பெண் உன்னை ஏற்றுக் கொள்வாளா, இல்லையான்னு தெரிஞ்சுக்க வேண்டாமா? இந்த உரிமை, படிச்ச பெண்களுக்குத்தானா? இதையும் யோசிச்சுப் பார்க்கிறது நல்லதில்லையா?"

"சடகோபன் இருக்காரா?" என்று கேட்டான் துருவ்.

"கீழே இருக்கார்."

துருவ் வேகமாகக் கீழே இறங்கிச் சென்றான். மஞ்சுளாவும் பின்தொடர்ந்தாள்.

**கோ**மளா, ஒரு குழந்தையின் முகத்தில் காணும் வியப்புடன், 'ஹாலி'லிருந்த பொருள்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். துருவ் அவள் அருகில் சென்றான்.

"என்னைக் கல்யாணம் பண்ணிக்க உனக்கு இஷ்டமிருக்கா? இல்லேன்னா, தைரியமாச் சொல்லு..."

கோமளா அப்பாவைப் பார்த்தாள். 'சரி என்று சொல்' என்று கூறுவது போலிருந்தது அவருடைய முக பாவனை. கோமளா குனிந்து கொண்டே தலையசைத்தாள். அவள் முகம் சிவந்திருந்தது.

துருவ் மஞ்சுளாவை நோக்கிக் கேட்டான்: "ஆர் யு ஹாப்பி நௌ?"

"நான் சந்தோஷமா இருக்கிறது அவ்வளவு முக்கியமில்லே. நீயும், இன்னும் குறிப்பாச் சொல்லப் போனா, அந்தப் பெண்ணும் சந்தோஷமா இருந்தால் சரி. வில் யு கீப் ஹர் ஹாப்பி?"

துருவ் பதில் கூறாமல் சோபாவில் போய் உட்கார்ந்து கொண்டான்.

"சடகோபன், உங்க பொண்ணும் 'சரி'ன்னுட்டா. இப்போ பணம் தேடற பிரச்னை உங்களுக்கில்லே. கல்யாணச் செலவு என்னுடையது."

"ஐ வான்ட் எ ஸிம்பிள் மேரேஜ்..." என்றான் துருவ். மஞ்சுளா அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

"இந்தக் கல்யாணத்தை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டு தொழில் நிறுவனத்துக்கு விளம்பரம் தேட வேண்டா

இந்திரா பார்த்தசாரதி




''ஏங்க, மாப்பிள்ளைக்கு வேண்டிய ரிஸ்ட் வாட்ச், டைம்பீஸ், வால் கிளாக் எல்லாம் ஒரே கடையில் வாங்கிட லாங்க!'' என்ற இந்த விளம்பரத்தைத் தினமும் மத்தியானம் மூன்று மணியள வில் கேட்கிறோம். வரதட்சிணைக் கொடுமையால் அவஸ்தைப்படும் பெண்ணைப் பெற்றவர்களுக்கு இந்த விளம்பரம் எரிச்சலூட்டுகிறதே! தேவை தானா?

— வி. கமலா.



மென்பதற்காகச் சொன்னேன்'' என்றான் துருவ் ஆங்கிலத்தில்.

மஞ்சுளா மிகச் சிரமப்பட்டுச் சினத்தை அடக்கிக் கொண்டாள். துருவ் மாடிக்குச் சென்றதும், சடகோபனிடம் சொன்னாள்: ''உங்களுக்குத் துருவ்வைப் பத்தி நன்னாத் தெரிஞ்சிருக்கும்னு நினைக் கிறேன்.''

''தெரியாம என்ன. எத்தனை வருஷமா உங்க வீட்டுக்குப் பட்சணம் கொடுத்துக் கொண்டு வர்றேன்...'' என்றார் சட கோபன்.

''அதனால்தான் சொல்றேன்... உங்க பொண்ணுக்கு அவனோட அனுசரிச் சுண்டு போகத் தெரியணும்...''

''அதுக்கென்ன பேஷாத் தெரிஞ்சுப்பா. உங்க வீட்டுச் சம்பந்தத்துக்குக் கொடுத்து வைச்சிருக்கணும். எனக்கு என்ன சொல்ற துன்னு தெரியலே. இவ்வளவு பெரிய அதிர்ஷ்டமா? என் பொண்ணுக்கான்னு நினைச்சுப் பார்க்கவே பயமாயிருக்கு...''

''பயமா, ஏன்?''

''ஒரு பிச்சைக்காரி தலையிலே கிரீடத்தை வச்சுட்டு, 'நீதாண்டி இந்த ராஜ்யத் துக்கு மகாராணி'ன்னா பயம் இல்லாமப் போகுமா?''

''உங்க பொண்ணுன்னா பயப்படணும். உங்களுக்கென்ன?''

''அவ குழந்தை... அவளுக்கு இப்படி ஒரு வீட்டுக்குப் போகப் போறோமே, அதுக்கு என்ன அர்த்தம்னு கூடத் தெரியாது. அவளுக் காக நான்தான் பயப்பட்டாகணும்.''

''பயப்படாதீங்கோ. நாங்கள்ளாம் சிங் கம், புலியில்லே, மனுஷாதான்.''

''சேச்சே... நான் அப்படிச் சொல் லலே...'' அவர் கையெடுத்துக் கும்பிட் டார். ''இது தெய்வத்தை நேருக்கு நேர் சந் திச்சா ஏற்படற பயம்; பயபக்தி...''

''கல்யாணத்துக்கு ஏற்பாடு செய் யுங்கோ... நகை நட்டெல்லாம் நான் பார்த் துக்கறேன். அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். கல்யாணச் செலவு எத்தனை ஆகும். அதை மட்டும் சொல்லுங்கோ.'' என்றாள் மஞ்சுளா.

''நீங்கதான் சொல்லணும். எனக்கு ஒண்ணும் புரியலே. என் கையை விட்டுப் போயிடுத்து. நான் பண்ணறதா இருந்தால் எங்க மனுஷாளை எல்லாம் கூப்பிட்டாக ணும். சாப்பாட்டுச் செலவு மட்டும் பத்தா யிரம் ஆகும்.''

''உங்க மனுஷா, எங்க மனுஷான்னு யாரும் வேணாம். உங்களுக்கு ரொம்ப வேண்டியவாளை மட்டும் கூப்பிட்டாப் போறும்... துருவ்வுக்கும் நிறையப் பேரைக் கூப்பிட்டாப் பிடிக்காது. சரி... நீங்க ஒண் ணும் பண்ண வேணாம். நானே ஒரு நல்ல ஹோட்டல்லே ஏற்பாடு செய்யறேன். ரிஜிஸ்ட்டர் மேரேஜ் போறும்.''

''என்ன சொல்றேள் நீங்க?'' என்று துணுக்குற்றுக் கேட்டார் சடகோபன்.

துருவ் வைதிகக் கல்யாணத்துக்கு ஒப்புத்துக்க மாட்டான்.''

''இது எப்படி...? நான் எப்படி எங்க மனுஷாளை இதுக்கப்புறம் பார்க்க முடி யும்? எனக்கு இவ ஒருத்திதான் கல்யாணத் துக்கு இருக்காளா? தயவு செய்து...''

''சரி, துருவ்வைக் கேட்டு வைக்கிறேன். நாளைக்கு வாங்கோ...''

வெளியே செல்ல ஆயத்தமாகத் துருவ் கீழே இறங்கி வந்தான். சடகோபன் 'இப்பொழுதே கேட்டு விடுங்களேன்' என்பது போல் மஞ்சுளாவைப் பார்த்தார்.

''துருவ், உன்னை ஒண்ணு கேக்கணும்'' என்றாள் மஞ்சுளா. ''கல்யாணம் எப்போ வைச்சுக்கிறது?''

''என்னிக்கு வேணும்னாலும் வச்சுக்க லாம். 'ஸிம்பிள் வெட்டிங்!''

''வைதிகக் காரியங்கள்?''

''ஒய் நாட்?''

மஞ்சுளா அவனை ஆச்சர்யத்துடன் நோக்கினாள். அவன் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டான் என்றுதான் அவள் நினைத்தாள். இந்தப் பிள்ளையை எப்படித் தான் புரிந்து கொள்வது?

''அப்புறம் நீ ஆட்சேபணை சொல்லக் கூடாது.''

''எதுக்காகச் சொல்லணும்? ஐ வான்ட் எ 'ரிலிஜியஸ் வெட்டிங்! எல்லா மந்திரங் களையும் கட்டாயம் சொல்லியாக ணும்...''

சடகோபன் முகம் மலர்ந்தது. ''கார்த் திகை முடிய நாலு நாள்தான் இருக்கு. அப்புறம் மார்கழி, சூன்ய மாசம். தை மாசம் வச்சுக்கலாமா?'' என்றார்.

''நோ... இப்போவே வச்சுண்டாக ணும். எல்லா மாசமும் நல்ல மாசந்

தான்...'' என்றான் துருவ்.

''அதெப்படி, கல்யாணம்னா விளையாட்டு மாதிரி பேசறேளே... கொஞ்சம் யோசிச்சு...''

''மிஸ்டர்சடகோபன்,இன்னும்ஒருவாரத்திலே கல்யாணத்தை நடத்த உங்களுக்கு இஷ்டமில்லேன்னாச் சொல்லிடுங்க. நான் உங்களை வற்புறுத்தலே...'' என்றான் துருவ்.

சடகோபனுக்குப் பயம் வந்துவிட்டது. வந்த அடூர்ஷ்டம் கைநழுவிப் போய் விடப் போகிறதே என்ற அச்சத்தில் உடனே சொன்னார்: ''சரி, சரி... நாலு நாளுக்குள்ளே நல்ல நாள் கிடைக்காமப் போயிடுமா, நான் இப்பவே போய் வாத்தியாரைப் பார்த்து முகூர்த்த நாள் குறிச்சுடறேன்... பத்திரிகை அடிக்க வேண்டாமா?''

''அதெல்லாம் ஒண்ணும் வேணாம்,'' என்றான் துருவ்.

''முக்கியமா யார் யாரைக் கூப்பிடணும்னு சொன்னேள்னா காரிலே போய்க் கூப்பிட்டு வந்துடலாம்'' என்றாள், மஞ்சுளா.

சடகோபனும், கோமளாவும் போனவுடன், மஞ்சுளா துருவ்வைக் கேட்டாள்: ''அதென்ன, வைதிகக் கல்யாணம் வேணுங்கிறே. கூடவே எந்த மாசமா இருந்தாலும் சரி, கல்யாணம் பண்ணி ஆகணுங்கிறே, ஐ டோன்ட் அண்டர்ஸ்டான்ட் யு.''

''எனக்கு வைதிக மந்திரங்களைக் கேட்கணும் போலிருக்கு. ஹோமம் வளர்த்துக் கல்யாணம் பண்ணிக்கிறதுங்கிறது ஒரு 'ரொமான்டிக் ஐடியா! எனக்கு நாதஸ்வரமும் வேணும்...''

''உனக்கு இதிலே இருக்கிற சுவாரஸ்யம், சடங்கோட சரியா...? அப்போ அந்தப் பொண்ணு மேலே உனக்கு...?''

''எல்லாந்தான் எனக்குப் பிடிச்சிருக்கு. ஒரு வேளை எனக்குச் சந்தியாவோட கல்யாணம் நிச்சயமாயிருந்தா, அவ இந்த வைதிகக் காரியத்துக்கெல்லாம் ஒப்புத்துக்காமே இருந்திருக்கலாம். ஷி ஈஸ் எ ப்ளடி ப்ரொக்ரஸிவ்!''

''ஓ! அப்போ நீ ஒரு கன்ஸர்வேடிவ். அப்படித்தானே?''

''நான் அப்படிச் சொல்லலே... இந்த 'ஸோ கால்ட் ப்ரொக்ரஸிவ்களுக்கெல்லாம் எந்தெந்த விஷயத்திலே ரசனை இருக்கு. அதை எப்படி அனுபவிக்கிறதுன்னே தெரியாது. 'வெரி ட்ரை இன்டலெக்சுவல்ஸ்' பாவம்...''

''உனக்கு ஒரு சமயம் சந்தியாவைப் பிடிச்சிருந்தது, இல்லியா, அப்போ அவ ஒரு 'ப்ளடி ப்ரொக்ரஸிவ்'னு உனக்குத் தெரியாதா?''

'''ஸோ கால்ட் ப்ரொக்ரஸிவ்'...'' என்றான் துருவ். மேலே பேசாமல் வெளியே சென்றான்.

(தொடரும்)

டாக்டர் பதில்கள்:

# சிசேரியன் ஆபரேஷன் அதிகரித்தது ஏன்?

○ க. ஸ்ரீலக்ஷ்மி, சென்னை — 73.

○ **பச்சிளம் குழந்தைகள் கக்குவது நல்லதா? கக்கல் ஏன் ஏற்படுகிறது?**

○○ **டாக்டர் லக்ஷ்மி நாகராஜன், சென்னை — 18:.**

○ குழந்தை அவசர அவசரமாகப் பாலை உறிஞ்சிக் குடிக்கும் போது நிறைய காற்றையும் உட்கொள்கிறது. காற்று வெளியேறும் போது சிறிதளவு பாலும் கக்கலாக வெளிப்படுகிறது. பால் கொடுத்த பிறகு, குழந்தையைத் தோளில் சாத்திக் கொண்டு முதுகில் தட்டி, ஏப்பம் விடச் செய்வதன் மூலம் காற்றை வெளியேற்றி, கக்கலைத் தவிர்க்கலாம். ஏப்பம் விடச் செய்யாவிட்டால் குழந்தைக்கு வயிற்றில் சங்கடம் ஏற்படும்.

○ **வெறும் தாய்ப்பால் தவிர வேறு எதுவும் உட்கொள்ளாத குழந்தைக்கு எத்தனை மாதங்கள் வரை அது போதுமானது?**

○ போதுமான அளவு இருப்பின், தாய்ப்பால் மிகச் சிறந்த உணவு. ஆனால் எல்லாக் குழந்தைகளுக்குமே மூன்று மாதங்களுக்குப் பிறகு வெறும் தாய்ப்பால் மட்டும் கொடுத்தால் போதாது. இந்தக் கட்டத்தில் கூடுதல் புரதம், இரும்பு, வைட்டமின் சத்துக்கள் தேவை. பழங்கள், காய்கறிகள், தானியங்கள், இவற்றின் கூழ்களைக் கொஞ்சம் கொஞ்சமாக மூன்றாம் மாத இறுதியிலிருந்து கட்டாயம் கொடுக்க ஆரம்பிக்க வேண்டும்.



○ **இந்தக் காலத்தில் நிறையப் பெண்களுக்கு 'சிசேரியன்' முறையில்தான் குழந்தை பிறக்கிறது. இதற்கு என்ன காரணம்?**

○ இயற்கை பிரசவத்தினால் குழந்தை அல்லது தாயின் உயிருக்கு ஆபத்து ஏற்படக் கூடும் என்ற நிலைமையில்தான் டாக்டர்கள் சிசேரியன் ஆபரேஷன் செய்கிறார்கள். நாற்பது ஆண்டுகளுக்கு முன், இந்த ஆபரேஷனைத் தாயின் உயிர் ஆபத்துக்குள்ளானால் மட்டுமே செய்து வந்தார்கள். இப்போது 'சிறிய குடும்பம்' நடைமுறைக்கு வந்துவிட்டதால் குழந்தையின் உயிர் 'பொக்கிஷமாகி' விட்டது. மேலும், துணிந்து சிசேரியன் செய்வதற்குத் தகுந்த வசதிகளும் இப்போது உள்ளன. ரத்த வங்கிகள், நல்ல ஆண்டிபயாடிக்குகள், அபாயமற்ற மயக்க மருந்து வசதிகள், அனுபவமுள்ள டாக்டர்கள்.... இதனால் சிசேரியன் ஆபரேஷனை அவசியம் ஏற்படும் போது வெற்றிகரமாகச் செய்ய முடிகிறது. தாயையும் சேயையும் காக்க முடிகிறது.

○ **ஜானகிமைந்தன் ராஜகோபால், திருச்சி — 16:**

○ **மஞ்சள் காமாலையால் இறந்தவருக்கு இறுதிச் சடங்கு செய்வதன் மூலம் அந்த நோய் நமக்கு வருமா? இந்நோய்க்குத் தக்க சிகிச்சை உண்டா?**

○○ **டாக்டர் ஆர். பார்த்தசாரதி, சென்னை — 41:**

○ இந்த முறையில் மஞ்சள் காமாலை பரவுவதற்கான சாத்தியக்கூறுகள் மிகச் சொற்பமே. உணவுப் பொருட்கள் மூலம் தான் பொதுவாகக் காமாலைக் கிருமிகள் பரவும். சுகாதாரமான சூழ்நிலை, உணவு போன்றவை இந்நோய் நெருங்காமல் தடுக்க உதவும். மஞ்சள் காமாலைக்கு ஆங்கில மருத்துவத்தில் மருந்து கிடையாது. கீழாநெல்லிச் சாறு கைகொடுக்கும்; பூரண ஓய்வும், நீராகாரமும் சீக்கிரமாகக் குணமடைய உதவும்.

தொகுப்பு: **நமது நிருபர்**

# நகைகளுக்காக நடந்த கல்யாணம்!







எதுக்கு இப்படி பதறிப் போறே? தொழிலை அபிவிருத்தி செய்ய அடமானம் வைச்சிருக்கேன் ... கூடிய சீக்கிரம் மீட்டுடலாம் ...









ஒரு மாதம் கழித்து நகைகளைத் திரும்பப் பெற உதவி கோரி Legal Aid Board ஐ அணுகினாள் வஸுமதி. அந்த அமைப்பின் ஆலோசகர்கள் 'நகைகளைப் பெற்றுத் தர முடியும்; ஆனால் உனக்கு மணவாழ்க்கை முக்கியமா, இல்லையா?' என்று கேட்டு அவளை யோசிக்க வைத்தனர்.

வஸுமதி சிறிது சிந்தனைக்குப் பிறகு சொன்னாள்: "என் மண வாழ்க்கை இனிதாக இருக்க வேண்டும் என்றுதான் நான் விரும்பினேன். ஆனால் என் கணவர் என் நகைகளைக் கொண்டு தம் குடும்ப வியாபாரத்தை விஸ்தரிக்கும் திட்டத்துடன் தான் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கிறார். இல்லாவிடில் எந்தக் கணவராவது கல்யாணமான ஒரு வாரத்துக்குள் மனைவியின் நகைகளையெல்லாம் அடகு வைப்பாரா? இப்படித் திட்டமிட்டுச் செயல்பட்டு விட்டு 'உனக்கு என்னை விட நகைகள்தான் முக்கியமா?' என்று என்னையே சாமர்த்தியமாக மடக்குகிறார். தட்டிக் கேட்டால் அடிக்கிறார். இவருடன் நான் சந்தோஷமாக இருக்க முடியுமா? சந்தேகம்தான்."

குருசாமியை அழைத்துப் பேசினார்கள் மணநல ஆலோசகர்கள். "ஒரு கணவனுக்கு இந்த உரிமை கூடக் கிடையாதா? நான் என்ன ஊரில் இல்லாத பொல்லாத புது வழக்கத்தையா கடைப்பிடித்தேன். இது எல்லோர் வீட்டிலும் சகஜமாக நடக்கும் விஷயம்தானே. எங்கள் குடும்பத் தொழில் ஸ்திரமான, நற்பெயர் பெற்ற தொழில். நகைகளை அடகு வைத்துப் பெற்ற பணத்தைப் போல் பல மடங்கை மிகக் குறுகிய காலத்தில் சம்பாதித்து மனைவியின் நகைகளை மீட்பதோடு புதுப்புது நகைகளையும் அவளுக்குச் செய்து தர முடியும். அதைப் புரிந்து கொள்ளாமல் என்னை, எங்கள் குடும்பத் தொழிலின் ஸ்திரத்தன்மையையே சந்தேகிக்கும் தொனியில் அவள் பேசி விட்டாள்" என்று குருசாமி தமது வாதத்தை முன்வைத்தார்.

தம்பதி இருவரையும் ஒரு நாள் வரவழைத்துப் பேசினார்கள் ஆலோசகர்கள்:

மனைவியின் நகைகளை அடகு வைத்துத் தொழில் ஆரம்பிப்பதும் அபிவிருத்தி செய்வதும் நமது சமூகத்தில் சகஜமாக ஏற்றுக் கொள்ளப்படும் நடைமுறைதான். ஆனால் நகைகளை மீட்க முடியும் என்ற நம்பிக்கை கணவனுக்கு மட்டும் இருந்தால் போதுமா? மனைவிக்கும் அல்லவா இருக்க வேண்டும். இந்த நம்பிக்கை உருவாவதற்குக் கணவனின் குணங்கள், வியாபாரத் திறமைகள் என்ன என்பதை மனைவி உணர வேண்டும். அதற்கும் மேலாக, தன் பிறந்த வீட்டில் கொடுக்கப்பட்ட சீர் வரிசை நகைகளைச் சஞ்சலமின்றிப் பிரிய ஓரளவுக்கேனும் மனப் பக்குவம் வேண்டும்.

இதெல்லாம் கல்யாணமான ஒரு வாரத்துக்குள் அமையப்பெறுவது சாத்தியமில்லை. கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் புரிந்து கொள்ள வேண்டும். திறமைகளை உணர்ந்து தெரிந்து கொள்ள வேண்டும். அதற்குப் பிறகுதான் நம்பிக்கை பிறக்கும், அன்பு வலுப்படும். எனவே எடுத்த எடுப்பிலேயே குருசாமி நகைகளை அடகு வைத்தது தவறுதான்.

குருசாமி உடனடியாகப் பாதி நகைகளையாவது மீட்டு எடுத்து வந்து தனது பொருளாதார ஸ்திரத் தன்மையையும் அன்பையும் மனைவிக்கு நிரூபிக்க வேண்டும். வஸுமதி கணவன் வீட்டுக்குத் திரும்பிச் சென்று வாழ வேண்டும். எதிர்காலத்தில் நகைகளை அடகு வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால் குருசாமி, மனைவியின் உரிமை உணர்ந்து செயல்பட வேண்டும். வஸுமதியும் ஒத்துழைத்து உதவ வேண்டும்.

இந்த அறிவுரையை ஏற்றுச் சென்ற தம்பதி அதன்படி செயல்பட்டார்கள். இப்போது சுமுகமாக வாழ்க்கை நடத்துகிறார்கள்.

தொகுப்பு: **எஸ். ஆர்.**

## இசையை வெறுக்கும் வேஷம்!

"இயக்குனர் செந்தில்நாதன் என்னிடம் வந்து 'ஒரு மாறுபட்ட படத்துக்குக் கதை வைத்திருக்கிறேன் — அதில் நீங்கள் நடிப்பீர்களா?' என்று கேட்டார். 'கதையை முதலில் சொல்லுங்கள்' என்றபோது, 'நீங்கள் கோபப்படுவீர்கள்...' என்று தயங்கினார். 'எனக்குக் கதைதான் முக்கியம்; சொல்லுங்கள்!' என்று தூண்டிய பிறகு ஒருவாறு கதையைச் சொன்னார். இசையையே வெறுப்பவனைப் பற்றிய கதை! அந்தப் பாத்திரத்தில் நடிக்க ஒப்புக் கொண்டேன். அக்கதா பாத்திரத்தின் நிலையில் உள்ள யாருமே இசையை வெறுத்து விடுவார்கள். அவன் வாழ்க்கையில் விதியாக விளையாடுகிறது இசை! மேற்கொண்டு விவரமாகச் சொன்னால் 'சஸ்பென்ஸ்' போய் விடும்!"

— எஸ். பி. பி.

கூறக் கேட்டவர்: சலன்



# நான் பணி ஓய்வு பெறும்போது ஒரு போதும் என் மகனுக்கு பாரமாக இருக்கமாட்டேன்.

## எல்ஐசியின் ஜீவன் தாரா

**வாழ்நாள் முழுதும் ஓய்வு-ஊதியம்பெற உத்தரவாதம் எனக்கு.**



**லை:ப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்போரேஷன் ஆ:ப் இந்தியா**

# குழந்தையின் கேள்விக்கு என்ன பதில்? குவிஸ் விடைகள்:



**சரியான விடைகள்:**

1. இ
2. ஈ
3. இ
4. அ
5. இ

**சரியான விடைகளை எழுதியவர்கள்:**

* எம். அருள் முருகன், 142, காமராஜர் நகர், ஆரியமங்கலம், திருச்சி — 10.
* எம். விருத்தாசலம், 42/46, நரிமன் பவன், நரிமன் பாயின்ட், பம்பாய் — 21.
* கோமதி கணேசன், 9/82, 'சைதன்யா,' காந்தி நகர், காட்கோபர் கிழக்கு, பம்பாய் — 77.
* என். வேணு, A-106, TNHB குடியிருப்பு, காஞ்சிபுரம் — 631 501.
* ஆர். லக்ஷ்மி, 2, சேதுப் பிள்ளை தெரு, போஸ்டல்/ஆடிட் காலனி, சாலிக்கிராமம், சென்னை — 93.
* ஆர். ரமேஷ், 36, அப்பாவு பிள்ளை தெரு, கம்பம் — 626 516.
* அ. ஷண்முகசுந்தரம், 37, தேரு தெரு, சிட்லபாக்கம், சென்னை — 64.
* கே. ரமணி, F-34, மீனாக்ஷி சாலை, டி. வி. எஸ். நகர், மதுரை — 625 003.
* உஷா ராணி, 614, பரசுராம் கார்டன்ஸ், லக்ஷ்மிபுரம், உல்சூர், பெங்களூர் — 8.

பரிசுத் தொகை ரூ. 270 ஆக உயர்த்தப்பட்டு, மேற்கண்ட ஒன்பது பேருக்கும் தலா முப்பது ரூபாயாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.

---

### நடத்தை இயல் நிபுணர் டாக்டர் லில்லி நீலங்காவில் கூறுகிறார்:

---

குழந்தைகள் கேள்வி கேட்பதில் எவ்வளவுக்கெவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு சலிப்பு, பதில் சொல்லும் பெற்றோர்களுக்கு ஏற்படுவது சகஜம். இன்று கேள்விகளால் துளைத்தெடுக்கும் குழந்தைகள்தான் நாளை விஞ்ஞானிகளாகவும், ஆராய்ச்சியாளர்களாகவும், எழுத்தாளர்களாகவும் மலர்வார்கள். எனவே சலிப்புடன் எரிந்து விழாமலும் சாதுர்யமாகத் தட்டிக் கழிப்பதாக நினைத்துக் கொண்டு பேச்சை மாற்றாமலும் குழந்தைகளிடம் பதில் சொல்லுங்கள். ஒளிவு மறைவில்லாமல் பதில் சொல்ல வேண்டும். அதே சமயத்தில், மிக அதிகமான விவரங்களைச் சொல்லிக் குழப்பவும் கூடாது.

பொதுவாகவே, சிக்கலான கேள்விகளைக் கேட்கும் போது குழந்தைகள் உணர்ச்சி நிலை (feeling level)யிலிருந்து கேட்பார்கள். நாம் கூறும் பதில்கள் மூலம் அவர்களைச் சிந்தனை நிலைக்கு (thinking level) மிருதுவாக மாற்ற வேண்டும். அப்படிச் செய்வதன் மூலம் அவர்களுடைய யோசனைகளுக்கும் கற்பனைகளுக்கும் சரியான பாதையை நாம் காட்டலாம்.

போட்டியின் முதல் கேள்வியை எடுத்துக் கொள்ளுங்கள். குழந்தை எப்படிப் பிறக்கிறது? என்று கேட்காத சிறுவனோ சிறுமியோ கிடையாது! 'தோட்டத்தில்


லில்லி நீலங்காவில்

கிடைக்கும். ஆஸ்பத்திரியிலிருந்து கொண்டு வருவோம்' போன்ற பதில்களின் சாயம் வெகு சீக்கிரம் வெளுத்து விடும். அதே சமயத்தில் விஞ்ஞான ரீதியான விளக்கம் அளிக்கும் பருவத்தையும் குழந்தை எட்ட வில்லை... அதனால் அம்மா அப்பாவுடைய அன்புக்குக் கடவுள் தரும் பரிசுதான் குழந்தை என்று கூறலாம்.

ஏன் சிகரெட் பிடிக்கிறீர்கள்? என்ற கேள்வி கேட்கும் குழந்தைக்கு அது ஒரு தவறான செயல் என்பது இலைமறை காயாய்த் தெரிந்திருக்கும். அதை ஊர்ஜிதப் படுத்திக் கொள்ளவே கேட்கிறது. அந்தச் சமயத்தில் 'நீ வாயை மூடு!' என்று பதில் சொன்னால் குழந்தை மனம் புண்படும்; உங்கள் கோபம் உங்களைக் குற்றவாளியா கக் காட்டிக் கொடுக்கும். உங்கள் செயலை நியாயப்படுத்த முயன்றால் குழந்தைக்குத் தவறான மதிப்பீடுகள் ஏற்பட்டுப் போகும். 'மாறாக ஏன் கேட்கிறாய்? நீ என்ன நினைக் கிறாய்?' என்று குழந்தையைச் சிந்தனை நிலைக்கு மெள்ள உயர்த்துங்கள். தன் கருத்துக்கள் மதிக்கப்படுகின்றன என்ற பெருமையில் குழந்தை சரியாகச் சிந்திக்கும். உங்கள் தவறை, அதைக் கைவிட முடியாத இயலாமையைக் குழந்தையிடம் ஒப்புக் கொள்வதே புத்திசாலித்தனம்.

மரணத்தைப் பற்றிய மூன்றாவது கேள் விக்கு, 'எல்லோருக்கும் ஒரு நாள் அது நிகழும்' என்பதே சரியான பதில். இதைச் சொன்னால், 'நீ எப்போது சாவாய்?' 'நான் எப்போது சாவேன்?' என்று வரிசையாகக் கேள்விகள் வளரத்தான் செய்யும். 'சென்டி மென்டலாக' இது அச்சான்னியம் என்று எண்ணி, குழந்தையை வைவதில் அர்த்த மில்லை. 'கடவுள் நிர்ணயித்த தேதியில் அது நிகழும். அந்த ரகசியம் நமக்குத் தெரிந் தால் கடவுளுக்கும் மனிதனுக்கும் என்ன வித்தியாசம்!' என்று விளக்கம் தருவது புத்திசாலித்தனம்.

'நம்ம வீட்டில் மட்டும் கலர் டீ.வி. இல்லையே?' என்று கேட்கும் குழந்தை யிடம், நம்முடைய பொருளாதார இயலா மையைக் காட்டிக் கொள்வானேன் என்று எண்ணி, சீக்கிரமே வாங்கிடலாம் என்று சொல்வது ஆபத்து. கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முடியாவிட்டால் உங்கள் வார்த் தைக்கு மதிப்புக் குறைந்து விடும். 'ஒப்பிட் டுப் பேசக் கூடாது' என்று அடக்குவதும் சரியல்ல. ஒப்பிட்டுப் பார்க்க வேண்டிய வேறு சந்தர்ப்பங்களில் இந்தப் பழைய மேற் கோளைக் குழந்தை எடுத்துக்காட்டும்! அதனால், 'நம் வசதிக்கு இவ்வளவுதான் முடியும்!' என்று பளிச்செனக் கூறி விடுவது தான் உசிதம்.

கடைசிக் கேள்வியும் பொருளாதார ஏற்றத்தாழ்வின் அடிப்படையில் எழுவது தான். பல பெற்றோர்கள் ஏழைமை, இல்லாமை போன்ற சோகங்களே தெரியா மல் குழந்தைகள் வளர வேண்டும் என்று நினைக்கிறார்கள். இது அநாவசிய பயம். எனவே, வேலைக்காரியின் குழந்தை, தானும் வேலை செய்து அம்மாவுக்கு உதவியாகப் பணம் சம்பாதித்துத் தருவதை விளக்கி, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் பற்றிய சிந்தனை நிலைக்குக் குழந்தையை இட்டுச் செல்ல வேண்டும்.

பேட்டி: **வி. எம்.**

---

# போதைப் பொருள்களைப் புறக்கணிப்பது எப்படி?

**மா**ணவ சமுதாயத்தைப் பெரிய அள வில் அச்சுறுத்தும் பிரச்னை போதைப் பழக்கம். நண்பர்கள், சகாக்கள் செய் வனதான் நடைமுறை. அதையே நாமும் செய்ய வேண்டும் என்ற peer pressure இன் அழுத்தம் தாங்காமல் பலியாகி விடுபவர்கள் எத்தனை பேர்! போதைப் பொருள்களைப் புறக்க ணிக்க நீங்கள் என்னென்ன வகையில் மனவுறுதி பெறுவீர்கள். இதில் சமுதா யம் உங்களுக்கு எப்படி உதவ முடி யும்...? ஒரு பக்கக் கட்டுரையாக எழுதி யனுப்புங்கள். தலைசிறந்த கட்டுரைக்கு ரூ. 50 பரிசு.

பிரசுரமாகும் சிந்தனைச் சிதறல் களுக்கு ஆறுதல் பரிசு. மிக அதிகமான முதல் பரிசு பெறும் மாணவருக்குப் பொன் விழா மேடையில் ரூ. 2500/- சிறப்புப் பரிசு! முடிவு தேதி: 16.3.91. உறை மீது 'போதைப் பொருளைப் புறக்கணிக்க' என்று குறிப்பிட்டு, கல்லூரி முகவரியுடன் எழுதியனுப் புங்கள்.

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**




**கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி**









— டி. தண்டபாணி, ஆர்காடு.

**50**

**சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!**









— எஸ். மாரியப்பன், தேனி.



பெண் பார்க்கப் பதினைந்து நாட்கள் லேட்டாய் வந்தவர்!

o வளைகுடாப் போர் துவங்கிய பின் கடைக்குப் போனேன். நேந்திரம் வறுவல் வாங்கிவிட்டு வழக்கம் போல் பணத்தை நீட்டிய போது. ''போர்க்காலமாயிற்றே. விலை ஏறிவிட்டது'' என்றார் கடைக்காரர். ''கூட எவ்வளவு தர வேண்டும்?'' என்றேன். நான்கு ரூபாய்க்குப் பதிலாக ஐந்து ரூபாய் சொல்லுவார் என நினைத்தேன். அவரோ, ''ஒன்பது ரூபாய்'' என்றார்! ''என்னய்யா நீங்கள், பெட்ரோலிலா பொரிக்கிறீர்?'' என்றேன், அதிர்ந்து போய். கடையில் இருந்த அனைவரும் சிரித்து விட்டனர்.'

— நிர்மலா தியாகராஜன், சென்னை – 18.




ஒருவர்: பதினைந்து நாட்களுக்கு முன்பு, பெண் பார்க்க வர்றதா இருந்த, மாப்பிள்ளை வீட்டுக்காரங்க, இவ்வளவு லேட்டா வந்தும், நீங்க எப்படித் தயாரா இருக்கீங்க?''

மற்றவர்: வேறொண்ணுமில்லீங்க. மாப்பிள்ளை 'Postal Sorting Office'ல வேலை பார்க்கிறாரு. அதை வச்சுக் கணக்குப் போட்டது கரெக்டாப் போச்சு!

— எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

போலீஸ்காரர்: ஏன்யா! அறிவு இருக்கா? ஒன் வேயில் கார் ஓட்டிட்டு வர்றே?

டிரைவர்: அறிவு இருக்கிறதாலதான் இப்படி வர்றேன். அஞ்சு ரூபா பெட்ரோல் மிச்சமாகுமில்ல...!

போலீஸ்காரர்: சரி, மிச்சம் செய்த அஞ்சு ரூபாயை இப்படிக் கொடு!

— எஸ். ஏ. நூர்ஜஹான், ஆவூர்.







— என். ராமச்சந்திரன், கோயமுத்தூர்.

நித்யானந்தம் ரொம்பவும் கவலைப் பட்டுக் களைத்துப் போயிருந்தான். மூன்று நாள் முன்னால் வானத்தில் ஏறியிருந்த கருமையை இன்னும் யாராலும் துடைத்து விட முடியவில்லை. மழை!

சாதாரண மழை இல்லை. மானாவாரி மழை. ஒரு சில நிமிடங்களுக்கு மட்டும் கன்னிப் பெண்ணின் கல்யாணச் சிணுங்கல் போல் லேசாக இருக்கும். மற்ற நேரத்தில் எல்லாம் அணை திறந்த மழைதான். கொட்டித் தீர்த்து விட வேண்டியதுதானே! ஒட்டக வயிற்றுத் தண்ணீர் போல் எத்தனை நாட்களாகச் சேர்த்து வைத்த நீரோ! வானம் பொழிந்து கொண்டே இருந்தது.

அங்கங்கே குடிசைக் கூரைகள் சுவர்களோடு சரிந்து கொண்டிருந்தன. சாலை நீர் வீடுகளில் எல்லாம் புகுந்து கேணி நீரையும் சாக்கடை நீரையும் ஒன்றாக்கி நாறடித்துக் கொண்டிருந்தது. லாரிகளால் சாலைகளில் அங்கங்கே நாய் பறித்த பள்ளங்கள். இரண்டு சக்கர வாகனங்கள் தடுமாறின. கவிழ்ந்து எழுந்து நொண்டி ஓடின.

நித்யானந்தம் ஜன்னல் வழியே ஆகாயம் பார்த்தான். விடுகிற பாடாய் இல்லை. வீட்டுக்கூரை மீது தள தள, சட சட, ச்சொ, ச்சொ என்று நேரத்திற்கேற்றவாறு தாளம் கொண்டால்தான் அடுத்த அடி எடுத்து வைக்க முடியும். காடராக்ட் ஆபரேஷன் காரணமாகத் தடித்த கண்ணாடி வேறு. ஒரு கண்ணை இடுக்கிக் கொண்டு, கண்ணாடி வழியாக எங்கே பார்க்கிறார் என்றே தெரியாமல் பயமுறுத்தும் பூதக்கண்ணுடன் அப்பா வரப் போகிறாரா? நல்ல வேடிக்கை. அப்பாவுக்கு எழுபத்து மூன்று வயது என்பது அவருக்கே மறந்து விட்டதா என்ன?

கைத்தோல் சுருக்கங்களும், சுண்டிப் போன உடலும், லேசாய் விழுந்த கூனும், தளர்ந்த நடையும், கண்ணிமை ஓரச் சுருக்கங்களும் அப்பாவுக்கு அவருடைய வயதை ஞாபகப்படுத்தத் தவறி விட்டனவா என்ன?

''நீங்களா அப்பா?''

அப்பா பூதக்கண்ணால் நிமிர்ந்து அவனைப் பார்த்தார்.

''ஆமாடா'' என்றார்.

'வேண்டாம், உங்களால் முடியாது' என்றால் அவரைத் தாழ்மைப்படுத்துகிற மாதிரி ஓர் உணர்ச்சி அவரைப் பீடித்துக் கொள்ளும். எரிந்து விழுவார். சட்டென்று கோப அலை புரண்டு எழுந்து, சள்ளென்று காய் வார்த்தைகளாய் எதிரில் இருப்பவர்

# நிழல் குடை

வேறு.

''ஆனந்தா!''

''என்னப்பா?''

''முகூர்த்தத்துக்கு அப்புறம் நேரமாகுமில்ல?''

''மழை விட மாட்டேங்குதேப்பா.''

''அதுக்காக? போவாம இருந்துட முடியுமா? மழை இன்னிக்கு வரும். நாளைக்குப் போவும். கல்யாணத்தைத் திருப்பி நடத்துடா நல்லசிவம்மா சொல்ல முடியும்? போகாட்டி நல்லா இருக்காதுப்பா.''

''மாமாவோட மச்சினி பையனோட கல்யாணம்தானேப்பா.''

''இருக்கட்டும். ஆனா எனக்கு எம் மச்சான் முக்கியம். போவலைன்னா கோவிச்சுக்குவான். பொண்டாட்டியோட வந்து கூப்ட்டுப் போயிருக்கான். ரெண்டு நாள் முன்னாடியே வந்துடுங்க மாமான்னுதிருப்பித்திருப்பிச்சொல்லிட்டுப் போயிருக்கான். நான் வரேன். நீயும் நானும் போய்ட்டு வந்துடலாம்.''

நித்யானந்தம் அப்பாவை நிமிர்ந்து பார்த்தான். ஓர் அடிக்கு மறு அடி எடுத்து வைக்கவே அப்பாவுக்கு ஐந்து நிமிஷம் ஆகும். மூச்சிரைக்கும். ஆசுவாசப்படுத்திக் மீது கொட்டும்.

''சரி'' என்றான்.

வாசலில் இறங்கும் போது மழை கொஞ்சம் கருணை வைத்திருந்தது. ராத்திரி முழுக்க முழுக்க பெய்த களைப்போ என்னவோ! காலை ஏழரை மணிக்கு வானத்தில் மேகங்கள் இன்னும் ஒன்றன் மேல் ஒன்றாக ஏறிக் கொண்டிருந்தாலும் மழை இல்லை.

சாலையில் தண்ணீர். அவ்வப்போது வாகனங்கள் சென்றபோது தண்ணீர் பிளந்து 'ஷ்ஷ்' என்று பாம்புச் சீறலாய்ச் சீறி மறுபடி ஒன்று சேர்ந்தது. வெள்ளை வேட்டி மேலும், பான்ட்டின் மீதும் தண்ணீர் தெளிக்காதிருக்க காபந்து ஏற்பாடுகள் எல்லாம் பண்ண வேண்டியிருந்தது.

நித்யானந்தம் பெண் ஊர்வலத்தின் பின்னே நடக்கிறவன் போல மெதுவாக நடந்தான். அடையாறு, பங்களாவாசிகளால் நிரம்பிய பிரதேசம்தான். இருந்தாலும் ஏழை கண்டிராக்டர்களால் போடப்பட்ட

சுபா



சாலைகள் என்பதால் சாலை மிக மோசம். தாரில் கலந்து கொட்டப்பட்டிருந்த சரளைக் கற்கள் பெயர்ந்திருந்தன. ஒவ்வொரு அடிக்கும் பாதம் செருப்போடு இடமாவது, வலமாவது புரளப் பார்த்தது.

அப்பா அவன் தோளைப் பற்றி நடந்தார். அந்த நாட்களில் நல்லசிவம் மாமா எப்படி படிப்பில் வீக் என்பதையும், அவனை எப்படி அடித்து, மிரட்டி, படிக்கச் சொல்லிக் கொடுத்தார் என்பதையும் நித்யானந்தம் கேட்கிறானா, இல்லையா என்கிற பிரக்ஞை கூட இன்றிச் சொல்லிக் கொண்டிருந்தார்.

சாலை ஓரம் ஓர் ஆட்டோ ஓரங்கட்டி நின்றிருந்தது.

''வரியாப்பா?''

''எங்க சார்?''

''ராயபுரம்.''

''வராது சார். இந்த மழைல ராயபுரத்துக்கு வந்தா ஆட்டோவை நேரா காயலான் கடைக்கு வுட வேண்டியதுதான்.''

''பஸ்லயே போயிடலாண்டா நித்தி.''

நித்தியானந்தம் பிளாட்ஃபாரத்தில் இருந்து சாலைக்கு இறங்கினான். பிளாட்



(பள்ளி ஆசிரியர் பெற்றோரிடம்)

''ஏன் சார், நீங்க என்ன ஹோட்டல்ல சர்வரா வேலை பார்க்கிறீங்களா?''

''எப்படிக் கண்டுபிடிச்சீங்க?''

''உங்க பையனிடம் T ஃபார் டேபிள்னு சொல்லச் சொன்னா, T ஃபார் டிப்ஸ்னும் சொல்லலாமேங்கிறான்!''

— சம்பத் குமாரி.

ஃபாரமும் சாலையும் சேரும் இடத்தில் சரிவு. சரிவில் மழை நீர். பரவாயில்லை. சாலையில் நடந்தால் கொஞ்சம் சீக்கிரமாக நடக்கலாம் என்று அவன் நினைத்துக் கொண்ட நேரம் பின்னால் தொப்பென்று ஒரு சப்தம் கேட்டது.

''ஐயையோ... பெரியவர் வுழுந்துட்டாரு.. பெரியவர் வுழுந்துட்டாரு.''

நித்தியானந்தம் பதறி அடித்துக் கொண்டு திரும்பினான்.

அப்பா சாலையில் பாதியும் பிளாட்ஃபாரத்தில் பாதியுமாக இருந்தார். அவரிடமிருந்து விசித்திரமான முனகல் கேட்டது. அவசர அவசரமாக நித்தியானந்தம் அவரைத் தூக்கினான். திடுக்கிட்டான்.

அப்பாவின் வெள்ளை வேஷ்டியில் ரத்தத் திட்டுகள். சட்டையில் ரத்தத் திட்டு.

''அப்பா... என்னப்பா... என்ன ஆச்சுப்பா?''

''தண்ணில காலை வைச்சிட்டேன். அது பள்ளமா இருந்திருக்குது. தெரியலை. கால் தடுக்கி விட்ருச்சி'' அப்பா மூச்சிரைப்பினூடே, தொண்டைச் செருமலினூடே, தடுக்கித் தடுக்கிப் பேசினார்.

போர்க்களத்தில் ரத்த காயம் பட்ட வீரனைப் போல அப்பா இருந்தார். கால் விரலில் இருந்து ரத்தம் சொட்டுச் சொட்டாகக் கீழிறங்கியது.

''இவ்ளோர் ரத்தம் வருதேப்பா... வாங்க டாக்டர்கிட்ட போலாம் மொதல்ல.. இந்த மழையில வேணாம்னு சொன்னேன். கேக்கலை... இப்பப் பாருங்க...''

''டாக்டர்கிட்டல்லாம் வேணான்டா.''

''பின்னே?''

''வீட்டுக்குப் போயிடலாம். நீ மட்டும் கல்யாணத்துக்குப் போய்ட்டு வா.''

''ஆட்டோ..''

''ராயபுரத்துக்கு வராதுன்னு சொன்னேனே சார்.''

''இங்கதான் இந்திரா நகர் போகணும்.''

''ஆறு ரூபா கொடுக்கறியா?''

''யோவ். பெரியவர் அடிபட்டிருக்காரு. ரத்தம் வருது. இந்த நேரத்தில அஞ்சி, ஆறுன்னு பேசினே பலி போட்டுவேன். எடுய்யா வண்டியை!''

''அவருக்கு அடிபட்டது எனக்கென்ன சார் தெரியும்? அடடா... ரத்தம் வருதே.''

ஆட்டோ திரும்பியது. படபட என்று அடித்துக் கொண்டு, அரை மணி நேரம் நடந்த தூரத்தை அரை நிமிடத்தில் கடந்து வீட்டு வாசலில் நின்றது.

அப்பா ஆட்டோவிலிருந்து இறங்கினார். ரத்தம் வருவது நின்று போயிருந்தது. முழங்கால் சிராய்ப்பின் மேல் வேட்டி படிந்து. ஒரு பவுடர் பஃப் அளவு ரத்த முத்திரை.

தாங்கித் தாங்கி நடத்திப் போய்க் கதவு திறந்து வீட்டில் சேர்த்தான்.

''என்னங்க.. என்ன ஆச்சு?'' ஜமுனா பதறினாள்.

''விழுந்துட்டாரு... ரோட்ல பள்ளம். நான் மட்டும் மோட்டார் பைக்கை எடுத்துக் கிட்டுக் கல்யாணத்துக்குப் போய்ட்டு வரேன். எதிர்ல டாக்டர் வந்தவுட்னே அவர்கிட்டே காட்டிக் கொஞ்சம் மருந்து போட்டு வுடச் சொல்லு. ஊசி ஏதாவது போடணும்னா போடச் சொல்லு.''

நித்யானந்தம் மழைக் கோட்டு அணிந்து. ஹெல்மெட் பொருத்திக் கொண்டு பைக்கைக் கிளப்பினான்.

மழை அம்புகள் சாலையில் பைக்கை இருபது கிலோ மீட்டர் வேகத்திற்கு மேல் செல்ல விடாமல் தடுத்தன. வெல்லத் துணுக்கு மேல் எறும்புப் படை மாதிரி அவன் மேல் மழை நீர் ஆக்கிரமிப்பு. சாலையில் அங்கங்கே சின்னதும் பெரியதுமான வெல்லத் துணுக்குகள் போய்க் கொண்டுதானிருந்தன.

மழைக் கோட்டை மீறி, தண்ணீர் மார்பில் இறங்கி, ஜட்டி வரை ஊடுருவியது. கண்ணில் அவ்வப்போது நீரம்பு தந்தி எரிச்சல் வேறு.

நித்யானந்தம் ராயபுரம் போய்ச் சேர்ந்த போது மணி ஒன்பதரை. கல்யாணச் சத்திரத்தின் வாசலில் பைக்கை நிறுத்தினான். மழைக் கோட்டை எடுத்து மடித்துப் பக்கப் பெட்டியில் வைத்தான்.

சத்திரத்தின் ஹால் முழுக்க சரமாயிருந்தது. நாதசுரமும், சினிமாப் பாட்டும் கலந்து கட்டி வெளியில் வந்து மழை நீரில் நனைந்தன. நல்லசிவம் மாமாவைக் காணவில்லை.

வரவேற்பில் இருந்தவர்களை அவனுக்குத் தெரியவில்லை. பன்னீர் தூவி, சர்க்கரை கொடுத்து, சந்தனம் தடவித்தான் வரவேற்பு. இருந்தும், மாமா எங்கே?

நித்தியானந்தம் குளிரை உள்ளுக்குள்

ளேயே அடக்கி விட்டு மாமாவைத் தேடினான்.

ஒரு மூலையில் கக்கத்தில் தோல் பையோடு நின்று யாருடனோ பேசிக் கொண்டிருந்த மாமா தெரிந்தார்.

நித்தியானந்தம் அவரை நெருங்கினான். தொட்டான். திரும்பினார்.

''அடேடே, நித்தி... வா.. வா.. ரெண்டு நாள் முன்னாடியே வரச் சொன்னேனே?''

''எங்கே மாமா... ஒரே மழை.''

''ஜமுனா வரலை..? அப்பா வரலை? கொழந்தைகளை எல்லாம் கூட்டிட்டு வரலை?''

''அப்பா காலைல எங்கூடத்தான் பொறப்பட்டாரு.. பார்வை சரியா இல்லியா.. கீள வுளுந்து அடிபட்டுட்டாரு.. கை கால்ல எல்லாம் அடி...''

''அப்படியா.. சரி.. சரி.. நீ இருந்து சாப்பிட்டுப் போ. நாலாயிர ரூவா குடுத்துச் சமையல்காரனை ஏற்பாடு பண்ணியிருக்கேன்.''

''அப்பாவுக்கு வரணும்னுதான்...''

''டேய் சுந்தரம்.. ஜெனரேட்டர் வந்திடுச்சா பாரு.. கரன்ட் போய்ட்டா கஷ்டம். விடியோ எடுக்க முடியாது. அப்புறம் நித்தி... என்னவோ சொன்னியே.. ஒரே வேலை. அலைச்சல். இருபத்து நாலு மணி நேரத்துக்கு ஐயாயிர ரூபா சத்திரத்துக்கு. சாமான் செட்டுக்கெல்லாம் எக்ஸ்ட்ரா.''

''அப்பா உங்ககிட்ட வர முடியலேன்னு..''

''தாமோதரா... பாலுக்குச் சொல்லியிருந்தேனே.. என்ன ஆச்சின்னு போய்ப் பாரு. நித்தி நீ அங்கே உக்காரேன். நம்ம வூட்டுப் பையன் நீ.. உக்காந்து சாப்பிட்டுப் போவணும். என்னா? இந்த மளிகைக்கடைக்காரன் கூட ஒரே பேஜாரு. சாமான்ல முக்கியமா அரிசியை விட்டுட்டு மத்த எல்லாத்தையும் கொண்டாந்து போட்டுட்டான். நான் போய் அரிசி என்ன ஆச்சின்னு விசாரிக்கணும். உக்காந்து சாப்பிட்டுத்தான் போவணும்...''

நல்லசிவம் மாமா நகர்ந்து விட்டார்.

நித்தியானந்தம் கல்யாணப் பையனுக்குக் கைலாகு கொடுத்து, குலுக்கி விட்டு, அப்பாவின் சேமிப்பிலிருந்து எடுத்துத் தந்த நூறு ரூபாயை அன்பளிப்பாகக் கவரில் வைத்துத் தந்து விட்டுக் கல்யாணச் சத்திரத்தை விட்டு வெளிப்பட்டான்.

மழை இன்னும் நிற்காமல் பெய்து கொண்டிருந்தது.

அப்பா கேட்பார்...'நல்லசிவம் என்னைக் கேட்டானாடா? என்ன சொன்னே...' என்பார்... அவர் விழுந்து காயம்பட்டுக் கொண்டது போதும். இங்கே கல்யாண வீட்டில் நடந்தது அவனுக்கும் மழைக்கும் மட்டுமே தெரிந்திருக்கட்டும்...

## தங்கமான வள்ளியப்பா!



குழந்தை எழுத்தாளர் சங்கம் உருவாகி முதல் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய தருணம். எல்லோரும் சங்கம் உருவாகக் காரணமாக இருந்த வள்ளியப்பாதான் தலைவர் என்ற முடிவுடனேயே கூடினோம். யாரும் சற்றும் எதிர்பாராத விதமாக, வள்ளியப்பா, ''தலைவர் பதவிக்குத் திரு. வை. கோவிந்தனை முன்மொழிகிறேன்'' என்று கூறிவிட்டார். அப்படி அவரே கூறிய பிறகு வேறு பெயரை முன்மொழிய யாருக்கும் துணிவு வரவில்லை. இவ்வாறு தமக்கு எளிதில் கிடைத்திருக்கக் கூடிய தலைவர் பதவியை வயதிலும் அனுபவத்திலும் அதற்குத் தகுதியுடைய வேறு ஒருவருக்கு விட்டுக் கொடுத்தார் வள்ளியப்பா. தாம் செயலாளர் ஆனார்.

தமிழ்வாணனுக்கும் வள்ளியப்பாவுக்கும் இடையே குழந்தை இலக்கியம் எப்படி அமைய வேண்டும் என்பதில் நிறையக் கருத்து மாறுபாடு உண்டு. ஆனாலும் குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் துணைத் தலைவர் பதவியில் தமிழ்வாணன் இருக்க வேண்டும் என்று விரும்பி அதற்கு ஆவன செய்தார். இரண்டு அம்சங்களையும் வெவ்வேறாகக் கருதித் தனித்தனியே எடை போட்டுச் செயல்படக் கூடிய பெரிய உள்ளம் வள்ளியப்பாவிடம் இருந்தது.

கடைசித் தேதிக்கு முன் சங்கத்துக்குச் சந்தா செலுத்தியவர்களே நிர்வாகிகள் தேர்தலில் போட்டியிடலாம், வாக்களிக்கலாம் என்ற விதி உண்டு. கடைசித் தேதியில் கணக்குகளை நோட்டம் விடும் போது, தி. ஜ. ர., தூரன் போன்ற பெரிய புள்ளிகள் மறதி காரணமாகச் சந்தா செலுத்தாமலிருப்பதைக் கண்டு தாமே அவர்கள் சார்பில் செலுத்தி விடுவார் வள்ளியப்பா! ''பின்னால் ரசீதைக் காட்டி அவர்களிடம் பணம் பெற்றுக் கொள்ளலாம்; ஆனால் பெரியவர்கள் சங்கத்தில் உறுப்பினர்களாய் இல்லாமல் இருக்கக் கூடாது'' என்று சொல்வார், பண்பாளரான வள்ளியப்பா.

— பூவண்ணன்.

## நீங்கள் கேட்டவை — தராசு



* களத்தில் இறங்குவார்?

o எஸ். யோகலிங்கம், சென்னை — 82.

**? சிவாஜி மீண்டும் தேர்தலில் குதிப்பாரா?**

! குதிக்கும் நிலையிலா அவர் இருக்கிறார்? ஒருவேளை இறங்கலாம்!

o வே. செந்தில்குமார், கொங்கணாபுரம்.

**? 'ஜெயலலிதா இல்லை என்றால் அ. தி. மு. க. இல்லை' என்று வீரப்பன் கூறுவது சரியா?**

! சரிதான். இந்த 'ஒன் மான் ஷோ' அல்லது 'ஒன் வுமன் ஷோ' நமது நாட்டில் உள்ள பல கட்சிகளின் மிகப் பெரிய பலவீனம். நமது ஜனநாயகத்தின் பலவீனமும் இதுவே.

o ஜி. நீலா, மன்னார்குடி.

**? மறைந்த இந்திரா காந்தி உயிரோடு இருந்திருந்தால் இன்று வளைகுடாப் போர் ஏற்பட்டிருக்காது என்று எங்கள் ஊர் இலக்கிய வட்டத்தில் பேசிய விக கூறினார் — இது பற்றி?**

! காந்திஜி இன்று உயிருடன் இருந்தால்— ராஜாஜி இன்று இருந்தால் — இந்திராஜி இன்று இருந்தால் என்றெல்லாம் கற்பனை செய்வது தவறு. அவர்கள் அறிவாற்றல் இன்றைய மாறிய உலகச் சூழ்நிலையில் எப்படிச் செயல்படும் என்று எண்ணிப் பார்க்கும் அளவில் அந்த மேதைகளின் நிலைக்கு நாம் உயர்ந்து விடவில்லை.

o வை. கு. ராஜராஜர், திருபுவனம்.

**? இப்போதே அ. தி. மு. க. வினர் பதவிக்கு வந்த மாதிரி செயல்படுகிறார்களாமே?**

! அங்கே ஒரு ராஜீவ் வழிகாட்டும் போது இங்கே இவர்களுக்கும் துணிவு பிறப்பதில் வியப்பு என்ன?

o நா. ரகுநாதன், சின்னாங்குப்பம்.

**? 'பிரதம மந்திரி பதவி அனுபவிக்கும் படியும் இல்லை, சுவையாகவும் இல்லை' என்று சந்திரசேகர் கூறியுள்ளாரே?**

! அவர் பதவிக்கு வந்த முறை அனுபவிக்கும்படியும் இல்லை, சுவையாகவும் இல்லை என்பதால்தான் அப்படித் தோன்றுகிறது.

o ஜி. கதிரேசன், சிறுமுகை.

**? நீங்கள் கேட்டவை பகுதியில் வாசகர் பெயருக்கு முன்னால் வட்டமொன்று போடுகிறீர்கள், சுத்தப் பூஜ்யம் என்பதைக் குறிக்கவா?**

! முழுமையான, பூரணமான கேள்வி என்பதற்காகவும் இருக்கலாமே!

o ஸ்வீட் ரவி, கும்பகோணம்.

**? டி. வி. யில் ஜெயலலிதா அடிக்கடி தோன்ற ஆரம்பித்துவிட்டாரே?**

! திரை மறைவில் இயங்கியவர் திரையை நிறைக்க வந்திருக்கிறார்!

o அ. அஹமத் பாஷா, தக்கோலம்.

**? கருணாநிதியின் ஆட்சி கலைக்கப் பட்டது நியாயமானது என்று ஜனாதிபதி கூறியுள்ளாரே?**

! சந்திரசேகர் அரசு எழுதிக் கொடுத்ததைப் படிப்பதுதான் அவர் பணி!

o மு. மதிவாணன், அரூர்.

**? கேபிள் டி. வி. யை எதிர்த்துச் சினிமா உலகத்தினர் போராட்டத்தில் குதித்திருக்கிறார்களே?**

! நவீன விஞ்ஞான முன்னேற்றங்களை எதிர்த்துப் போராடி வெற்றி காண முடி

# கலைஞர் எப்படி இருக்கிறார்?



...காடுத்ததைப் படிப்பார்



* நாராசமா? இன்னிசையா?



* ஆடல், பாடல்!

யாது. அவற்றைச் சம்பந்தப்பட்ட அனைவருக்கும் நன்மை பயக்குமாறு நிர்வகிக்க முயற்சி செய்வதே நல்லது!

o எஸ். பாண்டியராஜ், காரைக்குடி.

**? ஜெயலலிதா முதல்வராகும் தகுதி உடையவரா?**

! முதல்வராகும் தகுதி உடையவரா என்பதை நிர்ணயிக்க வேண்டியது வாக்காளர்களே. தகுதியான ஒருவரைத்தான் வாக்காளர்கள் நியமித்திருக்கிறார்களா? என்பதை நிரூபிக்க வேண்டியது ஜெயலலிதாவே!

o எம். பி. பிரபாகரன், குடியாத்தம்.

**? கலைஞர் எப்படி இருக்கிறார்?**

! எப்போதுமே ஆட்சியில் இருப்பதைவிட எதிர்ப்புப் பணி ஆற்றும் போதுதான் அவர் பிரகாசித்திருக்கிறார். இப்போதும் அப்படியே. ஆட்சியிலிருக்கும் போது பொறுப்புணர்வுடன் அளவாகத்தான் பேச வேண்டிய நிர்ப்பந்தம். இப்போது முழுச் சுதந்திரம்.

o ஆர். ஜேஸ்மின் ரமேஷ், கம்பம்.

**? கர்நாடக முதல்வர் பங்காரப்பாவின் ஆடலும் பாடலும் குறித்து?**

! அவர் உற்சாகப் புருஷராக விளங்குவதில் நமக்கு ஆட்சேபணையில்லை. ஆனால் ராஜீவுக்கு ஏதேனும் ஆட்சேபணை உண்டா என்பதைத் தெரிந்து கொண்டு அவர் எச்சரிக்கையாக இருப்பது நல்லது.

o ஈ. ஆர். சங்கரன், ஈரோடு.

**? இ. காங்கிரஸ் — அ. தி. மு. க. கூட்டணி தான் அடுத்து தமிழகத்தில் ஆட்சியைப் பிடிக்கும் என்பது உறுதியா?**

! தேர்தலில் போட்டியிடுவது கூட்டணிதான். ஆனால் ஆட்சியைப் பிடிக்கும் வாய்ப்பு அ. தி. மு. க. வுக்கு மட்டுமே. அதுதானே இந்தக் கூட்டணியின் பரிதாபம்!

o கே. பி. கந்தசாமி, அருப்புக்கோட்டை.

**? சந்திரசேகருக்கு ஜால்ரா அடிக்கும் சோ பற்றி?**

! நம்முடைய காதுகளுக்கு நாராசமாக இருக்கலாம். ஆனால், சோவுக்கு அது இன்னிசையாக விளங்கக் கூடும் — மனப்பூர்வமான ஆதரவு எனில்.

o கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.*

**? ஆட்சியாளர்களுக்கு ஏற்ற வகையில் தொலைக்காட்சி தன் போக்கை மாற்றிக் கொள்ளுகிறதா அல்லது மாற்ற வைக்கப் படுகிறதா?**

! மாற்றப்படுவதற்கு முன்னால் தானே மாறிவிடுகிறது. அது அதிகார வர்க்கத்தின் இயல்பு!

o ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

**? தேவிலால் ராஜீவ் காந்திக்குக் கூடை கூடையாக லட்டு வழங்கினாராமே?**

! லட்டு இனிப்பாக இருந்தாலும் தேவிலால் கசப்பு என்பது ராஜீவுக்குத் தெரியும்.

* ஒன் வுமன் ஷோ!



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

கே. ஆர். தேவேந்திரன்,
பிள்ளையார் கோயில் தெரு,
கொணவட்டம்,
வேலூர் — 632 013.

## வட்டமேஜை

# "என்னைய வம்பிலே மாட்டி விடறீங்களே...?"



சென்னை — 20. பொன்னி கௌரி.

● என்னெய்க்குமே வெளியிடங்களில் பத்திரிகைகள் படிக்காத நான் வங்கியில் அரை மணி நேரம் காத்திருக்க நேர்ந்ததால் பா. ரா. கட்டுரையைப் படிக்க, படித்ததால் சிரிக்க, நான் சிரித்ததால் வங்கி ஊழியர்கள் என்னையே உற்றுப் பார்க்க... ஏன் சார் என்னெய வம்பிலே மாட்டி விடறீங்க நீங்க?

திண்டுக்கல், — 3. பழ. சேதுராமன்.

● சென்ற இதழ் 'கல்கி'யில் எப்படியெல்லாம் கலப்படம் செய்கிறார்கள் என்பதைப் படித்த போது மதிவண்ணன் எழுதிய புதுக் கவிதைதான் நினைவுக்கு வந்தது.

அரிசியில் கலப்பதற்குக்
கலப்படக்கல் வாங்கி வந்தான்
வேலைக்காரன்.
வாங்கிவந்ததைப் பார்த்த
மில் முதலாளி பதறினார்,
இதையா வாங்கி வந்தாய்?
இது ''கலப்படக்கல்!''

சென்னை — 44. ஆர். சரஸ்வதி.

● வாயில்லா ஜீவனாயினும் தாயன்பு எனும் உணர்ச்சி பொதுவானதே என்பதையும், வளர்த்தவனாலேதான் அவ்வாயில்லா ஜீவனின் வேதனையைப் புரிந்து கொள்ள இயலும் என்பதையும் பொட்டியடித்தாற் போல் புரிய வைத்த சிறுகதை வையவனின் 'கறவை.' காடுவெட்டியார் புகாரை வாபஸ் வாங்கியதில் வியப்பேயில்லை!

திருப்பரங்குன்றம். பு. கே. சுப்பிரமணியன்.

● 'தைப்பூசம்' படத்துக்கு எழுதப்பட்ட விமர்சனம் ரொம்ப ரொம்ப அம்சமாக இருந்தது!

த. அய்யன்பேட்டை. ஏ. எஸ். முத்து.

● எண்ணி எண்ணி ரசிக்கக் கூடிய தாரக பதில்களில் ஒன்று, ''ரா'' பற்றியது.

கம்பரசன்பேட்டை. எஸ். பாஜு.

● இந்த வாரச் 'சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!' பகுதியில் வெளியான ''கலைத்து விடுவேன்'' ஜோக் கண்டு வேதனையுற்றேன். நீங்களுமா இப்படி என வருத்தமுற்றேன்.

தஞ்சாவூர் — 1. யோகஜோதி ராமலிங்கம்.

● ''கலைதாங்கி'' சிறுகதை படித்தேன். ஆசிரியையாகப் பணிபுரியும் இருபத்தெட்டு வயதுப் பெண், என்னதான் ஆண்களிடம் அதிகம் பழகாவிட்டாலும், தான் காதலிக்கும் நபர் தன்னைக் காதலிக்கிறாரா என்று கண்டுகொள்ளாமல் இருப்பாளா?
யதார்த்தத்துக்கும் இந்தக் கதைக்கும் பாஸ்போர்ட் வாங்க வேண்டிய இடைவெளி உள்ளது!

தஞ்சாவூர் — 7. வளர்மதி ஆசைத்தம்பி.

● 'கலைதாங்கி' சிறுகதை நல்ல சஸ்பென்ஸ். யோகன், வளர்மதியைப் பெண் பார்க்கத்தான் மாமா, மாமியை அழைத்து வருகிறான் என நினைத்துக் கொண்டு... சே!

சென்னை — 35. எஸ். தங்கராஜு.

● ''ஹலோ! மிஸ்டர் மனோகரன். அட்வான்ஸ் வாழ்த்துக்கள். அடுத்து வரப் போகிற தேர்தலிலே, சிவகங்கைத் தொகுதியிலே நின்றால் கண்டிப்பாக நீங்கள்தான் ஜெயிக்கப் போகிறீர்கள்.

பம்பாய் — 14. எஸ். மணி.

● சிவகங்கைத் தொகுதியில் சாதனைகள் புரிந்தவரான, பா. மனோகரனைப் போல், ஒவ்வொரு தொகுதி எம். எல். ஏவும் இருந்தால், தமிழகம் நிச்சயமாய்த் தலைநிமிர்ந்துவிடும். இவர் போலவே, எங்கள் தொகுதி எம். எல். ஏவும் இருக்க மாட்டாரா — என ஏக்கப் பெருமூச்சு விட வைத்துவிட்டார்கள். மனோகரனை எங்களுக்கு அடையாளம் காட்டிய உங்களுக்கும் பாராட்டுக்கள்!

புதுவண்டிப்பாளையம். கடலூர் த. ரவீந்திரன்.

● கல்கி 20.1.91 இதழில் தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையத்தைத் தொடர்புபடுத்தி எஸ். டி. சோமசுந்தரம் கூறிய ஒரு ''செய்தி'' வெளியாகியிருக்கின்றது. அது முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது.

''அசிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர் ஆப் பாக்டரிஸ்'' பதவிகள் 28க்கு 558 பேர் விண்ணப்பம் செய்திருந்தார்கள். எழுத்துத் தேர்வு 10.2.1990 அன்று நடைபெற்றது. வெற்றி பெற்ற 56 பேர்களைத் தேர்வாணையம் நேர்முகத் தேர்வுக்கு 10.4.1990 அன்று வருமாறு அழைத்தது. 53 பேர் வந்திருந்தார்கள். நேர்முகத் தேர்விலும் வெற்றி பெற்றவர்களைத் தேர்ந்தெடுத்து, நாளிதழ்களில் தேர்வு முடிவுகளைத் தேர்வாணையம் அறிவித்தது. அரசுக்கு, தேர்ந்தெடுக்கப்பட்டோர் பட்டியலும் 9.5.90 ' அன்று' அனுப்பப்பட்டது. ஆனால் இப் பதவியில் தற்காலிகமாக ஏற்கெனவே பணியாற்றிக் கொண்டிருந்தவர்களில் சிலர் நீதிமன்றத்திற்குச் சென்று தடை ஆணை பெற்றமையால், பதவிகளை நிரப்ப முடியாத சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. தமிழக முன்னாள் முதல்வரோ, அவருடைய குடும்பத்தாரோ, பிறரோ இத் தேர்வில் தலையிடவேயில்லை.

சென்னை — 3. செயலாளர்,
தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434148.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka